நவம்பர் 27 மாவீரர் நாள்



2003



# தீரப் புதல்வர்கள்



1995ம் ஆண்டு யாழ்ப்பாண
இடப்பெயர்வுக்குப் பின்னர்
சிறிலங்காப்படையினர்
இங்கே உறங்கிய
எம் மாவீரச் செல்வங்களின்
கல்லறைகளை
சிதைத்து அழித்தனர்.
அந்தக் கல்லறைச் சிதைவுகள்
இங்கே
சேகரித்து வைக்கப்பட்டுள்ளன
சில நொடிப் பொழுதுகள்
சிரம் தாழ்த்துவோம்.

AFTER OUR DISPLACEMENT
IN 1995, THE SRILANKA ARMY
DAMAGED AND DESTROYED
THE MONUMENTS OF OUR
WAR HEROES, TREASURED BY
US. THE STONE REMAINS OF
THE LEFT OVERS HAVE BEEN
COLLECTED BY US. LET US
BOW OUR HEADS AND WAIT
AT THIS POINT FOR A FEW
MOMENTS.







**எமது** தாயக விடுதைலப் பயணத்தில் இதுவரைக்கும் பதினேழாயிரத்திற்கும் மேற்பட்ட போராளிகள் தமது உயிர்களை அர்ப்பணித்திருக்கின்றார்கள்.

விடுதலைப் பாதையில் அவர்கள் கடந்து வந்த துன்பங்கள், துயரங்கள் பல. தமது இலட்சிய உறுதியாலும், தன்னலமற்ற செயலாலும், தியாகங்களாலும் தாய்மண் மீதும், தமது மக்கள் மீதும் அவர்கள் கொண்ட பற்றாலுமே இவற்றையெல்லாம் அவர்கள் கடந்து வந்தவர்கள். எமது விடுதலைப் போராட்டத்தை தளர்ந்து போகவிடாது இதுவரைக்கும் நகர்த்திவந்தனர்.

தன்னலமற்ற செயல்களாலும், தூய்மையான வாழ்வாலும், இலட்சியத்திற்காக




தமது உயிர்களை அர்ப்பணித்ததாலும் அவர்கள் புனிதமானவர்களாகின்றார்கள்.

அவர்கள் பாதம் பட்டதால் எமது மண் புனிதம் பெறுகின்றது. அவர்கள் புதைந்து கிடக்கும் பூமி பலம் பெறுகின்றது. தமிழீழத்தின் உறுதிமிக்க அத்திவாரக் கற்களாக அவர்கள் நிலைக்கின்றனர். தமிழீழ தேசமெங்கும் பரந்து, மண்ணிலும், விண்ணிலும், கடலிலும் எம்மைக் காத்துநிற்கின்றார்கள். அவர்களின் வாழ்வும் செயலும் எமது இலட்சியப்பற்றை இன்னும் பலப்படுத்துகின்றன. அவர்களின் பாதையை தொடர்ந்து நாமும் உறுதியுடன் தடம் பதிப்போம். அவர்கள் இலட்சியத்தை ஈடேற்றுவதே எமது பணியாகும்.

**"புலிகளின் தாகம்**
**தமிழீழத் தாயகம்"**



“
எமது மாவீரர்கள்
மகத்தான மனிதப் பிறவிகள்.
அவர்களது வாழ்வும் வரலாறும்
எமது வீர விடுதலைக்
காவியத்தின் உயிர் வரிகள்
”

விடுதலை என்பது வாழ்வின் அதியுயர்ந்த விழுமியம். அந்த விழுமியத்தை இலட்சியமாக வரித்து, அதற்காக வாழ்ந்து, அதற்காகப் போராடி, அதற்காக மடிந்த எமது மாவீரர்கள் மகத்தான மனிதப் பிறவிகள். அவர்களது வாழ்வும் வரலாறும் எமது வீர விடுதலைக் காவியத்தின் உயிர் வரிகள்.

மாவீரர்களே, தமிழர் தேசம் உங்களுக்குத் தலைவணங்குகிறது. உங்களது தற்கொடையால் தமிழீழ மக்கள் இன்று தலைநிமிர்ந்து நிற்கின்றார்கள். உங்களது இரத்தத்தாலும், வியர்வையாலும், உங்களது இலட்சிய உறுதியாலும் கட்டியெழுப்பப்பட்ட எமது விடுதலை இயக்கம், இன்று யாராலும் வெற்றி கொள்ள முடியாத

மாபெரும் போராட்ட சக்தியாக உலகப் புகழீட்டி நிற்கிறது. போர் அரங்கில் நீங்கள் படைத்துச் சென்ற மகத்தான சாதனைகளையே இன்று உலகரங்கில், நாம் அரசியல் வெற்றிகளாக அறுவடை செய்து வருகின்றோம்.

இன்று உலகம் மாறி வருகிறது. உலக ஒழுங்கும் மாறி வருகிறது. உலக நாடுகளின் உறவுகளும் மாறி வருகின்றன. மனித சமுதாயம் முன்னென்றும் காணாத புதிய சவால்களுக்கு முகம் கொடுத்து நிற்கிறது.

இன்றைய உலக நிதர்சனத்தை, அதன் யதார்த்தப் புறநிலைகளை நாம் உதாசீனம் செய்ய முடியாது. இன்றைய காலத்தையும், இக் காலத்தில் கட்டவிழும் சூழலையும் நாம் ஆழமாகப் புரிந்து, கால நிலை மாற்றங்களுக்கு ஏற்ப, எமது விடுதலைப் பாதையை செப்பனிடுவது அவசியம். இன்றைய காலத்தின் தேவை அது. உலகப் போக்குடன் முரண்படாது, உலக வரலாற்றின் ஓட்டத்திற்கு இசைவாக, நாமும் எமது போராட்ட வரலாற்றை முன்நகர்த்திச் செல்வதே விவேகமானது. இன்றைய வரலாற்றின் கட்டாயமும் அதுவே.

எமது விடுதலைப் போராட்டம் கால் நூற்றாண்டுகால வரலாறாக நீட்சிபெற்றுச் செல்கிறது. இருபது ஆண்டுகளுக்கு முன் இன்றைய நாளில், எமது முதலாவது மாவீரன் களப் பலி ஆகியதைத் தொடர்ந்து இன்று வரை பல்லாயிரக் கணக்கில் எமது போராளிகள் விடுதலைப் போரில் களமாடி வீழ்ந்திருக்கிறார்கள். எமது இனத்தைப் பேரழிவிலிருந்து பாதுகாத்து, எமது தாயக நிலத்தை அந்நியனிடமிருந்து மீட்டெடுக்க எமது விடுதலை இயக்கம் அளப்பரிய அர்ப்பணிப்புகளைச் செய்துள்ளது. எமது மாவீரர்களின் இம் மகத்தான தியாகங்களால், எத்தனையோ தடவைகள் நாம் பேரழிவுகளின் விளிம்பிலிருந்து மீண்டிருக்கின்றோம். மரணத்தின் வாயிலுக்குச் சென்று மறுபிறவி எடுத்திருக்கின்றோம். வல்லாதிக்க சக்திகளின் தலையீடுகளைத் தனித்து நின்று தகர்த்திருக்கின்றோம். எமது விடுதலை இயக்கம் இன்று வானளாவ வளர்ந்து நிற்கிறது. நிமிர்ந்து நிற்கிறது. எமது இயக்க விருட்சத்தின் வேர்களும் விழுதுகளுமாக நிற்பவர்கள் எமது மாவீரர்களே.

2002 ஆம் ஆண்டு
தமிழீழ மாவீரர்நாளை முன்னிட்டு
தமிழீழத் தேசியத் தலைவர் அவர்கள்
ஆற்றிய உரையிலிருந்து.






முதலாவது மாவீரன் லெப்.சங்கரின் கல்லறை




ஆதவப்பிரியன்

# நித்தியம்




கண்ணீரைச் சொரிந்தபடி கண்மணியே - என்று
நீ கூவி அழைப்பது எனக்குக் கேட்கிறது!
அம்மா ஏனம்மா அழுகின்றாய்
வீரியப் படுத்திய அன்பின் வீச்சாக
நீ வாழ மூச்சாக நான் இருப்பேன் உனக்காக!
மொட்டவிழும் பூப்பறித்து
நித்தமும் நீ வந்து - என்
கல்லறைக்குச் சொரிகின்றாய்.
காரணத்தை நானறிவேன்!
உன் பிள்ளை தரணியிலே மரணிக்க மாட்டானே
விடுதலைக்காய் உழைத்தவர்கள்
உறங்குவதும் உண்டோ அம்மா?
தேசத் துயர் துடைக்க வித்தாக வீழ்ந்தவர் நாம்
அம்மா இன்னும் ஏன் தாயே அழுகின்றாய்?
இளங் காற்றாய் நான் இருப்பேன் - உன்
மெய் தழுவிப் போவதற்கு
உன் பாதம் தொடும் நோக்கில்.
கடல லையாய் இருந்திடுவேன்!
வித்தாக வீழ்ந்த நான் முளையாக
எழுந்து பெரும் விருட்சமாய் நின்றுனக்கு
நிழல் தந்திடுவேன்.

# ஒளியாய் நிழலாய்

விடைபெற்ற புதல்வரின்
சொற்களும் நினைவுகளும் எதிரொலிக்கின்றன.

“பறவைகள் கூடும் மரங்களின் கீழே
மீண்டும் சந்திப்போமென்று புன்னகையுடன்
கைகுலுக்கிக் கொள்ளலாம்
அல்லது
மண்ணில் விழிக்கும்
ஒரு செடியின் முகத்தில்
நம்மைக் காணலாம்” என்றபின்
கையசைத்துச் சென்றவீரர்





கைகளைப் பற்றியும்
தோளினைத் தடவியும்
நினைவாய் ஆழப்பதிந்த விழிகள்
நெஞ்சில் அசைகிறது.

"கடலில்
குளிரில்
படகில்
தொடரும் பயணம்
பகைவரை வீழ்த்திய பின்
மலர்வுடன் மடி திரும்பும்" என்றனர் அவர்கள்

காற்று மெதுவாய் வீசியது
வெள்ளிகள் விழித்திருந்தன
இரவுணவை
அவர்கள் முழுமையாகச் சாப்பிட்டிருக்கவில்லை
எல்லா முகங்களிலும் பூக்களிருந்தன
எல்லா விழிகளிலும் நெரிப்பெரிந்தது
மெல்லிய மஞ்சள் ஒளியில்
அணியணியாய்ச் சேர்ந்து நின்ற பின்
சென்றனர்
சென்ற பின்
ஒரு வெற்றிடம்
பதற்றத்தோடும் யாசிப்போடும் அங்கு விரிந்தது

அவர்கள் நின்றுலவிய முற்றத்தில்
ஒவ்வொரு முகங்களாய்
விழிகளாய் ஒளிமுகங் கொண்டிருந்தன
அந்தப் பாதச் சித்திரங்கள்

'காற்றே!
என் மைந்தரை வருடிச்செல்
இந்தப் பாதச்சுவடுகளை எடுத்துச் செல்லாதே
கண்களால் அவற்றைக் காத்திருக்கிறேன்'

அவ்விரவு
சத்தங்கள் கேட்கவில்லை
தொலை தூரமா?

சேதிகள் வரவில்லை

யாதாயிருக்கும்?
துயரும் வலியும் மிக்க
ஞாபகங்களுடன்
அலைந்தலைந்து களைத்தபின்
மறுநாள்
சூரியன் எடுத்து வந்தான்
எதிரிகள் வீழ்ந்த கதையை
என்னரும் புதல்வரின் வீரக்கதையை.
கடலில்
குளிரில்
படகிலெல்லாம்
தீமூண்டதாம் பகைவர் மீது.

கரையில்
தரையில்
எங்குமே முள்ளழிந்து முளைத்தனவாம்
நிழல் முளைகள்

வெற்றி பூத்து வீசியது வாசல்

மனமெழுந்து
சுழன்று
பறந்தது
கணமே
சரிந்து வீழ்ந்தது போனவர் நினைவில்
யார் முகம் வீழ்ந்ததோ?
யார் குருதி வடிந்ததோ?
எனது எல்லாக் கீதங்களும் காயமுற
வீழ்ந்த வீரர் நினைவெழுந்தது.

நாளும் இரவுகள்
தீயில் மூண்டவாறும்
தேனில் இழைந்த படியும்
இப்படியே இப்படியேதான்

ஒரு பறவையை வருடவும்
ஒரு மலர்ச்செண்டை முத்தமிடவும்
இன்னுமென்ன செய்யவேண்டும் இப்படி இப்படியே.

---

கருணாகரன்





# விடிவைத் தேடி

புறப்படத் தயாராகுங்கள்
கிழக்கினை நோக்கி
புதிய விடிவொன்றை தேடுவோம்.
இல்லையேல்
இரவுகளை இல்லாதொழிப்போம்.

எழுது கோலையும்,
கலப்பை முனையையும்
முகில்களைக் கிழிக்கும்
ஆயுதமாக்குவோம்.
முகிலினை விலக்கி
புதிய ஒளியினை தேடுவோம்.
புறப்படத் தயாராகுங்கள்.

காற்றைப் போலன்றி
பெரும் புயலாக......
எல்லோர் மூச்சையும்
கடும் சூறாவளியாக்கி
புறப்படத் தயாராகுங்கள்.

மலைகளில் பிறந்த நீரை
நதிகளாக்கினோம்.
நதிகள் காய்ந்துவிடப் போகிறது.
கடல்கள் ஆகுவோம்
கடலினை நோக்கி
புறப்படத் தயாராகுங்கள்.
கிழக்கினை நோக்கி
எல்லோரும்
புறப்படத் தயாராகுங்கள்

ஈரத்தி.





# பேய்களின் பெருநதி

யாத்திரிகன்.

மண்ணை அரிப்பதற்காய்
பேய்களின் பெருநதி
பெருக்கெடுத்தது.
அணைகட்ட சிலர்
மண்வெட்டி கொண்டு
புறப்பட்டனர்.
புறப்பட்டவர்களில் சிலர்
நதியின் குளிர்மலையில்
மூழ்கித் திளைப்பதில்
இன்பம் கண்டனர்.
சிலர் அணைகளாய்
மாறி
அசையாமல் நிமிர்ந்தனர்.
அவ்அணைகளை,
அடித்துச் செல்வதற்காய்
மீண்டும் மீண்டும்
பேய்களின் பெருநதி
ஆக்ரோசமாய் எழுந்து
சூழ முனைகையில்
அணைகள் விடவில்லை.
அவை
தீயொன்றின் மூலத்தில்
இருந்து புறப்பட்டனவாய்
பெரும்
சுவாலையை வளர்த்தன.
சுவாலையின் வெம்மையால்
பேய்களின் பெருநதிச்
சுவடுகள் அழிந்தன.



# தொடரணியின் ஊடறுப்பு



கார்த்திகை 1998. இருளை அடித்து விரட்டிய சூரியன் வானில் எம்பிக்குதிக்க முற்படும் வேளை. புலிகளை அடித்து விரட்டி மாங்குளத்தைப் பிடித்து விடலாம் என்ற மமதையில், புதிய நாள் ஒன்று ஒலுமடுவின் கரிப்பட்டமுறிப்பு நோக்கிய திசையிலிருந்த புலிகளின் காவலரண் தொடரின் முன் பிறந்து தகதகக்கின்றது..

இருளோடு இருளாக நகர்ந்த டாங்கிகளும், துருப்புக்காவிகளும், புல்டோசர்களும் உருமறைந்திருந்த கனரக ஆயுதங்களும் சூரியக் கிரகணங்களின் கீற்றைக் கண்டதும் தாம் திரட்டி வைத்திருந்த ஏழைச்சிங்கள மக்களின் வரிப்பணத்தையெல்லாம் உருட்டிச் சிவப்பாக, மஞ்சளாகப் பேரிடியுடன் புலிகளின் நிலைகளை நோக்கி உமிழ்ந்து வெடிக்க வைக்கின்றன.

புலிகளின் தொலைத்தொடர்புக் கருவிகள் சுதாகரிக்கின்றன. அப்போதுதான் புலப்படுகின்றது ஒலுமடுவில் மட்டுமல்ல, மாங்குளத்தை நோக்கி மும்முனைகளிலும் (கண்டி வீதி வழியாக, மூன்று முறிப்பு வழியாக) எதிரி படையெடுக்கின்றான் என்பது.

விண்ணைக்கிழித்து வரும் ஆயிரக்கணக்கான எறிகணைகள் புலிகளின் நிலைத் தொடர்களின் மீது தமது பணியைச் செவ்வனே செய்கின்றன.. எண்ணுக் கணக்கின்றி வந்த எறிகணைகள் காவலரண்கள் நெடுகிலும் புழுதியை வாரியிறைத்து பிய்த்துப் பிறாண்டுகின்றன. முன்பகுதியிலிருந்து இடியாய் வருகின்ற நேரடிச் சூடுகளில் இருந்து உயிர்களைப் பாதுகாக்கவென அணிகள் தொடர் பதுங்குகுழிகளில் ஊர்ந்து, தவழ்ந்து காப்பெடுக்கின்றன வரப்போகின்ற ஊடறுப்புத் தாக்குதல்களை முறியடிப்

பதற்காக.

பெருரக, சிறுரக இயந்திரத் துப்பாக்கிகளில் இருந்து சீறிவருகின்ற ரவைகள் ஒன்றை ஒன்று முந்திப்பட்டுத் தெறித்து, குளவிகள் ரீங்காரம் செய்வது போல ஒலியெழுப்பு கின்றன. சல்லடை போடும் இந்தச் செல்லடிகள் மத்தியி லும் புகைப்படலத்தினூடு எட்டிப்பார்த்து பதுங்குகுழிகளுக் குள் உள்ள தோழர்களுக்கு நிலைமையைக் கூறிவிட்டுத் தாமும் பாய்ந்து காப்பெடுக்கும் அந்த அசாத்தியத் துணிச்சல் எங்கிருந்து வந்ததோ? இடையிடை துணிகள் கிழிக்கும் சத்தம் நிகழப்போகும் எதிர்காலத்தைச் சற்று விளம்பரம் செய் தாலும், பீறிட்டு வரும் இரத்தத்தைத் தடுத்து, அறிவிழக்கும் வரை சண்டை பிடிக்கும் புலிச்சம்பிரதாயத்திற்கு அத்துணி களே உற்ற நண்பர்கள்.

காவலரண்கள் ஒவ்வொன்றாய் அவற்றின் நம்பகத் தன்மையை இழந்து கொண்டிருக்கின்றன. மறைப்புக்கள் போராளிகளைப் பார்த்து மன்னிப்புக் கேட்கும் தோரணையில் மண்டியிடுகின்றன. காட்டு மரங்களின் கொப்புகளும், இலைகளும் அடுத்த காவலரணின் நிலைப்பாட்டை அறிய முடியாது மறைத்துவிட்டிருக்கின்றன.

வெளியே காயப்போடப்பட்ட, வருடத்திற்கு ஒரு முறை வழங்கப்படும் வழங்கல் உடுப்பின் நிலைப்பாடு தெரி யாமல் அங்கலாய்த்த இளைய போராளி, "எழும்பி ஓடி என்னட்ட இப்ப வாங்கப்போறாய்" என்ற அணித்தலைவ னின் அதட்டலுக்குக் கட்டுப்பட்டு விம்முகிறான்.

திடீரென எறிகணைகளின் வீச்சு நிறுத்தப்படுகிறது. மாறாக துப்பாக்கிகள், நேரடிச்சூட்டு உந்திகள் டாங்கிகள் உந்துகணைகள் ஆகியவை சேர்ந்து உருக்கு மழை. யொன்றைப் பூமிக்குச் சமாந்தரமாகப் புலிகளின் ஒலுமடு நிலைகளை நோக்கிப் பெய்துதள்ளுகின்றன..

போராளிகள் தமது சகாக்களைக் கூப்பிட்டுப் பார்த்தே உயிர்பற்றிய உறுதிப்பாட்டை எடுக்கின்ற அளவிற் குத் தூசுப்படலம். கண்ணுக்குத் தூசாகவும், காதுக்குச் சத்தமாகவும்... என்ன நடக்கிறது என்பதைக் களவீரரே அறியமுடியாத நிலைப்பாடு. திடீரென இரும்புச் சில்லுகளு டன் சுழற்பட்டி மோதும் சத்தம் மிக அருகில் முன்னே கேட் கிறது.

சிலிர்த்த புலிகள், ஆவேசமாக எழும்புகிறார்கள் "அடியுங்கோடா! டெல்ட்டா 09க்குள்ளால டாங்கி பின்னுக்குப் போட்டுதடா! டேய் RPG யாலை உந்தப்பக்கம் அடி" அடித்தொண்டையின் ஓங்கிய குரல்கள். கைக்குண்டுகளும், துப்பாக்கி ரவையடிகளும் கைகள் கால்களுக்கூடாக சிதறிப் பாய்கின்றன. இச் சிறுரக ஆயுதப்பயன்பாடு தொடரவே தூசுப் படை சற்று விலகுகிறது. அன்பழகன் அவதானிக்கிறான். இதயச்செல்வனின் காவலரண்களின் மேலாக இடித்துத் தள்ளியபடி ஒரு டாங்கி முறுக்கெடுத்துக் கொண்டிருக்கிறது. "அண்ணை, அடுத்த பொயின்ரை ஓ·ப் பண்ணிப் போட்டான்" என்று கூறியபடி சுட்டுத் தள்ளியபடி நின்ற அந்த உருக்கு எந்திரத்தின் முன், எந்தக்கட்டளையுமின்றித் தாச்சிக்கு உச்சு வது போல வெட்டி வெட்டி ஓடி அண்மிக்கின்றான்.

அவனுக்குத் தான் தெரியும்! ரவை துளைத்த தும் வெட்டியகற்றி, பின் களத்தில் உயிர்காப்பான் மருத்து வன் ரவை படும் முன்னே அது புறப்படும் இடத்தைச் சுட்ட கற்றி உயிர் காப்பான் களவீரன் எத்தனை முறை அனு பவமோ அன்பழகனுக்கு!

டாங்கியின் அருகில் செல்கிறான் அருகாக! மிக அருகாக! இனி டாங்கியால் அவனைக் கொல்ல முடியாது. டாங்கியின் கொலை வீச்சு அற்ற இறக்கக் கோணத்திற்குள் அவன் போய் விட்டான். டாங்கியின் சுழல் மேடையின் துவாரச்சூட்டாளன் உள்ளே பதுங்கியிருக்க வேண்டும். துப்பாக்கியின் சுடுகுழல் வானை இலக்கு வைத்து நிற்கிறது.

டாங்கியின் குலுக்கம்! உள்ளிருப்போர் சங்கதியை அறிந்து 'கியரை' மாற்றுகிறார்கள் போலும்... எங்கே மாறுகின்றது கியர் பதட்டத்தில் டாங்கி தடுமாறுகின்றது.

என்ன செய்கின்றான் அன்பழகன்! போன வேகத் தில் துப்பாக்கியைத் தரையில் போட்டுவிட்டு டாங்கியின் சில்லுக்கரைகளில் காப்பெடுத்துத் தனது வெடி பொருள் ஆடையில் இருந்து ஒரு குண்டை உருவி எடுக்கிறான். பாதுகாப்பு நெம்பை அகற்றி விட்டு, துள்ளித்தடக்கி டாங்கி யின் சுழற்பட்டியில் கால் வைத்துத் தளத்தில் ஏறிச் சுழல் மேடையில் கை ஊன்றி மேல் வழி ஓட்டையைத் தேடுகின் றான்.

பாய்ந்தேறிக் குண்டு போட, அவன் என்ன டாங்கிப் படை வீரனா? குண்டு போடத் தாமதமாகும் அக்கணங்களில் 30 மீற்றர் தூரத்தில் நின்ற மற்றைய டாங்கியின் கண்களில் அன்பழகனின் செயற்பாடு பட்டுவிடுகின்றது. அன்பழகனை நோக்கி வேகமாகத் திருப்பப்பட்ட துப்பாக்கியின் குறிகாட்டி அவகாசம் வழங்காது பொழிந்து தள்ளுகிறது. நெஞ்சில், வயிற்றில், காலில், தலையில், தொடையில்..... முழங்கால் குற்றி விழுகின்றான் அன்பழகன்.

கை உயர்ந்து விரல்கள் விரிகின்றன. 7 மாதம் நெஞ்சோடு கட்டி உறவாகி விட்டிருந்த அந்த வெளிநாட்டுக் கைக்குண்டு விடுபடுகிறது. இரும்புச் சட்டங்களில் தட்டித் துள்ளியபடி சென்று அமைதியுடன் காத்திருக்கிறது. அதன் காத்திருப்பு 5 செக்கன்கள் மட்டுமே.

தொய்ந்து விழுகிறான் அன்பழகன். "இரண்டு பேரும் தண்ணிக்குப் போய் ஏதும் நடந்தாலும்.... நீ இரு நான் போய் எடுத்துக்கொண்டாறன்" என்று சொன்ன அவனது நண்பனைக் காவலரணுடன் நசித்துக்கொன்றாயா? "மச் சான் அடுத்த டெல்டா 37 பொசிசனிலை இறைச்சிக்கறி காய்ச்சினதெண்டு பக்கத்துப் பொசிசன் பிள்ளைகள் (பெண் போராளிகள்) தந்ததுகள் எடுத்து வைச்சிருக்கிறன். இந்தா..." என்றவனை உருக்குலைத்தாயா? நண்பனின் நிறைந்த அன்பால் அழகு பெற்ற அந்த அன்பழகன், தனது நண்பனின் சிதையருகே வீரச்சாவடைகிறான்.

5 செக்கன்களை முடித்த கைக்குண்டு, தன் சக்தியெல்லாம் திரட்டி ஓங்கி முழங்குகிறது. சிவப்புத் தணற் பொறிகள் மேல் வாயில் வழியாக ஒரு முறை எகிறி அடங்கு கிறது. அவ்வளவுதான் டாங்கியின் செல்கள் ஒவ்வொன்றா யும், கூட்டுச்சேர்ந்தும் முழங்கி முழங்கி டாங்கியைத் துவம் சம் செய்கின்றன.

காவற் தொடர் நெடுகிலும் அடித்து வந்த புதிய உத்வேகப் புலிப்புயலில் சிக்கி, மேலும் 3 டாங்கிகள் பற்றி எரிந்தன.



-கரன்



# உயிர் வீச்சுகள்

தமிழவள்

**காவலரண் மீதிருந்து பாடுகிறேன் தோழி
தோர்வினிலே தேறியதாய்
தேசப்புல் ஆகியதாய்
நேற்றெனக்கோர் தோழி சொன்னாள் தோழி**



பகை நெஞ்சில் ஏறும் புயல் காற்று
அண்ணன் போற்றும் உயிர் வீச்சு
வெடிகொண்டு போன கருமூச்சு
வென்றால் தோல்வி எமக்கேது

தேசத்தின் துயர்உமை ஈகமாய் மாற்றுதே
தோர்வுக்காய் நடப்பவை உருக்கென ஆக்குதே
வல்லமை அடிக்கடி வந்துமைப் பார்க்குமே
பகைதேடி நீர்போக வாசல்வந் தனுப்புமே

நேற்றின்று நாளை என்றேதும் இல்லையே
சாவின்றி வாழ்வேது என்பதே கொள்கையே
சொல்வேண்டாம் செயல்மட்டும் என்பதே எல்லையே
உயிர்துாவும் பயமேதும் உங்களுக்கில்லையே

இருளாகும் போதெல்லாம் ஒளியூற்றும் நெய்யாகி
பகைசூழும் நாளெல்லாம் திறவுகோல் நாமாவோம்
கரும்புலிகள் எம்மை
சொல்லாவிட்டால் புரியாது
சொன்னால் நம்ப முடியாது
உடல்வெடியாக உயிர் கரையும்
உணர்வுகள் மட்டுமே வெளிபரவும்.

# விடியல்

அ. பிலோமினா

இருள் திரை போர்த்திங்கு
நில மகள்
மாசுப்பாதங்கள் பதிந்து
நொந்து போயுள்ளாள்.
ஒரு கூட்டில் பொரித்து
கூடியிருந்த குஞ்சுகள்
திக்கொன்றாய்.

விடியலின் அறிகுறி
சேவலின் கூவலில் அல்ல
கதிரவனின்
இளஞ் சூட்டுக் கதிர்களிலுமல்ல
ரீங்காரமிடும்
சிட்டுக் குருவிகளின் சிறகடிப்பிலுமல்ல

கனத்த இருளின் கருக்கலில்
காலடிகள் சில கரைதேடி
காவியங்கள் ஆகும்
இவை உண்மை
விடியலுக்காக.

# மலரும் பொழுதுகளில் என் நினைவு

மது

மலரும் பொழுதுகளில் என் நினைவு
அவர்களின் கருமேனி தழுவும்
கரையோரத் தென்றலாய்
இறுதிவரை அவரைத் தாலாட்டும்
அலைகளாய்
அவர் விழிகளிலே பிரகாசிக்கும்
விடியலின் ஒளியாய்
அவர் மார்பிலே தவழும்
நஞ்சு மாலையாய்
அவர்கள் வேகமாய் செலுத்தும்
வெடிமருந்துப் படகாய்
இறுதியில் அவர் உடற்துகள் கலக்கும்
உப்பு நீராய்
அவர் சேதி சொல்ல வந்து மண்டியிடும்
மடக்காய்
எந்நாளும் இருக்கவே
விரும்புகின்றேன்.





"மற்றவர்கள் இன்புற்றிருக்க வேண்டும்
என்பதற்காக தன்னை இல்லாதொழிக்க
துணிவது தெய்வீகத் துறவறம்; அந்தத்
தெய்வீகத் துறவிகள்தான் கரும்புலிகள்"

தமிழீழத் தேசியத்தலைவர்



# இவர்களிடம் மட்டும் தோற்கும் என் கவிதை



புதுவை இரத்தினதுரை

அவர்களை எழுதும்
ஒவ்வொரு தடவையும்
நான் தோற்றே போகிறேன்.
சொற்களைக் கோர்வையாக்க
சூத்திரம் போலொன்று வருகிறதேயன்றி
கவிதை வரக்காணோன்.
"றொபேட்புரூஸ்" போல
நானும் விடுவதாயுமில்லை.
"கரும்புலியின் நதிமூலம்"
எனக்கு புலப்படுவதாயுமில்லை.
எனினும்
இத்தனை வல்லமைகளுடன் சேர்ந்தே
எனக்கும் நாளாந்தமென்பதில்
எத்தனை செருக்கு.
என்தோல்வியே வெற்றியாகிறது.
கண்ணாடி முன்நின்றாலும்
அவர்களின் கட்புலனுக்கே
அவர்கள் அகப்படாத போது
கவிஞன் காவியமெழுதுவது எப்படி?
அகப்பட்டதை வைத்து
வம்சவரலாற்றுடன் சமரகவிபாடலாமே தவிர
ஊன்றின் தோற்றுவாயை தொடவே முடியாது.
பாறை பிளந்தூறும் சுனைக்கசிவை
சுரக்கச் செய்வது எத்தனை பிரயத்தனம்?
வெடிப்பினூடு வருகிறதே ஊற்று
எத்தனை ஆச்சரியம்.
இந்த ரிஷிமூலம் யாரறிவார்?
எட்ட இருப்பவர் மட்டுமல்ல
கிட்டவானவரும் அளவெடுக்கமுடியாதென்பதே
என் ஆதங்கம்.
எனக்குத் தெரியும் அவர்களை
அவர்களுடன் பேசியிருக்கிறேன்.
சிரித்து மகிழ்ந்திருக்கிறேன்.
சிரித்து மகிழ்வதென்பது சிலருக்கு ஆச்சரியமாக
இருக்கலாம்
அவர்கள் புன்னகை மேகங்கள்.
சந்தோஷ நதிகள்.
சிறுவச்சிரிப்பு முகத்தினர்.
என்னென்றுதான் முடிகிறது இவர்களால்
இப்படி இருந்து போக?
பிரமித்துப்போவேன் ஒவ்வொரு தடவையும்
ஒன்றாக உறங்கி.
கரும்புலி இவள்.
கரும்புலி இவன்
கரும்புலிகள் இவர்களென
தெரிந்துதான் விரியுமென் உறவு.
"என் மரணத்தின் பின்னும்
தொடருவேன் உங்களுடனான தோழமையை"
அவர்களை எழுதும்
ஒவ்வொரு தடவையும்
நான் தோற்றே போகிறேன்
சொற்களைக் கோர்வையாக்க
சூத்திரம் போலொன்று வருகிறதேயன்றி
கவிதை வரக்காணோன்.
"றொபேட்புரூஸ்" போல

நானும் விடுவதாயுமில்லை.
"கரும்புலியின் நதிமூலம்"
எனக்கு புலப்படுவதாயுமில்லை.
எனினும்
இத்தனை வல்லமைகளுடன் சேர்ந்தே
எனக்கும் நாளாந்தமென்பதில்
எத்தனை செருக்கு.
என்தோல்வியே வெற்றியாகிறது.
கண்ணாடி முன்நின்றாலும்
அவர்களின் கட்புலனுக்கே
அவர்கள் அகப்படாத போது
கவிஞன் காவியமெழுதுவது எப்படி?
அகப்பட்டதை வைத்து
வம்சவரலாற்றுடன் சமரகவிபாடலாமே தவிர
ஊற்றின் தோற்றுவாயை தொடவே முடியாது.
பாறை பிளந்தூறும் சுனைக்கசிவை
சுரக்கச் செய்வது எத்தனை பிரயத்தனம்?
வெடிப்பினூடு வருகிறதே ஊற்று
எத்தனை ஆச்சரியம்.
இந்த ரிஷிமூலம் யாரறிவார்?
எட்ட இருப்பவர் மட்டுமல்ல
கிட்டவானவரும் அளவெடுக்கமுடியாதென்பதே
என் ஆதங்கம்.
எனக்குத் தெரியும் அவர்களை
அவர்களுடன் பேசியிருக்கிறேன்.
சிரித்து மகிழ்ந்திருக்கிறேன்.



சிரித்து மகிழ்வதென்பது சிலருக்கு ஆச்சரியமாக
இருக்கலாம்.
அவர்கள் புன்னகை மேகங்கள்.
சந்தோச நதிகள்.
சிறுவச்சிரிப்பு முகத்தினர்.
என்னென்றுதான் முடிகிறது இவர்களால்
இப்படி இருந்து போக?
பிரமித்துப் போவேன் ஒவ்வொரு தடவையும்
ஒன்றாக உண்டு
ஒன்றாக உறங்கி.
கரும்புலி இவள்.
கரும்புலி இவன்.
கரும்புலிகள் இவர்களென
தெரிந்துதான் விரியுமென் உறவு.
"என் மரணத்தின் பின்னும்
தொடருவேன் உங்களுடனான தோழமையை
சொல்லி விடைபெற்று போனன் ஒரு கரும்புலி.
"எனக்காகவும் ஒருபாட்டு எழுதவேண்டும்"
சத்தியம் வாங்கிவிட்டுப் போனான் இன்னொருவன்
"நீங்கள் இருக்கும் போதே நாங்கள்
போய்விடவேண்டும்
அப்போது தான் பாட்டுவரும்"
கூட்டாகச் சொல்லிக் கையசைத்துப் போனது
ஒரு கரும்புலிக் கூட்டமே
சொல்லிப்போகும் இரவெல்லாம் அழுவேன்
அருகில் படுத்திருக்கும் மனைவிக்கும் தெரியாமல்.
வெடிக்கிறார்களோ. இடிக்கிறார்களோ
அறியேன் நான்.
சேதிவர நானும் சிதறிப்போகிறேன்.
"இலக்கடைந்தார்" என அறிந்து
முகம் சிரிக்கும்.
தோழமையின் பிரிவெண்ணி
இதயம் அழும்.
இரண்டக வாழ்வெனக்கு இதில் மட்டும்.
கேட்டபடி பாட்டெழுத அமர்வேன்
பாட்டா வரும்?
என் பேனா கசிந்தாலும்
விழிகள் கசிந்துதானே அதிகம்.
அழுதழுது எழுதி முடிக்க
நானெரிந்த சாம்பல் குவிந்திருக்கும்.
கவிஞனாக இருப்பது பெருமையா?
எவன் சொன்னான்.
கரும்புலியை எழுதிப்பார் புரியும்.
இத்தனைக்குப் பின்பும்
எழுதியெழுதிப் பார்க்கும் ஒவ்வொரு தடவையும்
ஏனோ நான் தோற்றே போகிறேன்.
இன்னும்தான்.







# தமிழீழ விடுதலைப் போரில் வீரச்சாவடைந்த கரும்புலிகள்



**கரும்புலிகள்**
**கப்டன் மில்லர்**
வல்லிபுரம் வசந்தன்
துன்னாலை, கரவெட்டி
யாழ்ப்பாணம்.
01.01.1966 - 05.07.1987
நெல்லியடி
ம.ம.வித்தியாலயத்தில்
அமைந்திருந்த சிறிலங்கா
இ.மு.மீதான
கரும்புலித்தாக்குதலில்



**கடற்கரும்புலி மேஜர்**
**காந்தரூபன்**
யோகராசா
கோணேஸ்வரன்
குச்சம் ஒழுங்கை,வல்வை
யாழ்ப்பாணம்.
09.10.1971 - 10.07.1990
வல்வைக் கடற்பரப்பில்
கடற்படைக்கலங்கள்
மீதான
கரும்புலித் தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன் வினோத்**
வேலுப்பிள்ளை திலகராசா
காட்டுவளவு, வல்வை
யாழ்ப்பாணம்.
19.08.1970 - 10.07.1990
வல்வைக்
கடற்பரப்பில்
கடற்படைக்கலங்கள்
மீதான
கரும்புலித் தாக்குதலில்





**கரும்புலி**
**மேஜர் தொண்டமான்**
கண்ணப்பர் நல்லதம்பி
சித்துப்பேனா,
ஊத்துச்சேனை
மட்டக்களப்பு.
21.12.1971 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கடற்கரும்புலி கப்டன்**
**சிதம்பரம்**
பெரியதம்பி சந்திரன்
நடராசாவீதி, வல்வை
யாழ்ப்பாணம்.
20.12.1972 - 04.05.1991
பருத்தித்துறைக்
கடற்பரப்பில்
கடற்படையினரின்
கடற்கலங்கள் மீதான
க.பு.தாக்குதலில்



**கடற்கரும்புலி மேஜர்**
**நிலவன்/வரதன்**
கந்தசாமி
இராமச்சந்திரன்
கன்னிச்சை வடமுனை.
மட்டக்களப்பு
19.07.1974 - 26.08.1993
கிளாலிக் கடற்பரப்பில்
கடற்படையினரின் நீருந்து
படகு மீதான கடற்கரும்
புலித் தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன் மதன்**
சீனிவாசகம் சிவகுமார்
143/11, எல்லைவீதி,
மட்டக்களப்பு.
07.09.1975 - 26.08.1993
கிளாலிக் கடற்பரப்பில்
கடற்படையினரின்
நீருந்து படகு
மீதான கடற்
கரும்புலித் தாக்குதலில்









**கடற்கரும்புலி**
**கப்டன் கொலின்ஸ்**
பர்ணாந்து சில்வெஸ்ரர்
நறுவிலிக்குளம்
மன்னார்.
05.12.1969 - 10.07.1990
வல்வைக்
கடற்பரப்பில்
கடற்படைக்கலங்கள்
மீதான
கரும்புலித் தாக்குதலில்



**கரும்புலி லெப்.கேணல்.**
**போர்க்**
மாப்பாணபிள்ளை
அரசரத்தினம்
ஓமந்தை, வவுனியா
வன்னி.
11.11.1959 - 23.11.1990
மாங்குளம்
இராணுவ முகாம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கரும்புலி**
**மேஜர் டாம்போ**
காசிப்பிள்ளை தயாபரன்
நாச்சிக்குடாச்சந்தி
மன்னார்.
17.08.1967 - 19.03.1991
மன்னார்-சிலாவத்துறை
இராணுவ
முகாம் மீதான
க.பு.தாக்குதலில்



**கடற்கரும்புலி கப்டன்**
**ஜெயந்தன்**
சம்புக்குட்டி பத்மநாதன்
சோதிபுரம்,
மட்டக்களப்பு
- 04.05.1991
பருத்தித்துறைக்
கடற்பரப்பில்
கடற்படையினரின்
கடற்கலங்கள் மீதான
க.பு.தாக்குதலில்



**கரும்புலி**
**கப்டன் மதிநிலவன்**
கணபதிப்பிள்ளை தவராசா
245, பிரதானவீதி,
திருமலை.
09.09.1975 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக
பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கடற்கரும்புலி மேஜர்**
**புகழரசன்/புவீந்திரன்**
சுப்பிரமணியம் நாகதீபன்
அரியாலை,
யாழ்ப்பாணம்
15.11.1975 - 29.08.1993
பருத்தித்துறை
கடற்பரப்பில்
கடற்படையினரின் டோரா
விசைப்படகு மீதான
தாக்குதலில்



**கடற்கரும்புலி கப்டன்**
**மணியரசன்**
வேதநாயகம் ராஜரூபன்
மணற்காடு குடத்தனை
யாழ்ப்பாணம்.
22.10.1973 - 29.08.1993
பருத்தித்துறை
கடற்பரப்பில்
கடற்படையினரின் டோரா
விசைப்படகு மீதான
தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**மேஜர் கணேஸ்**
நாகநாதி சிவனேசன்
நவக்கிரி, புத்தூர் மேற்கு,
யாழ்ப்பாணம்.
26.01.1973 - 11.11.1993
பூநகரி -நாகதேவன்துறை
இ.கடற்படைத்தளம்
மீதான
ஒப்பரேசன் தவளை
நடவடிக்கையின் போது



**கரும்புலி**
**மேஜர் கலையழகன்**
பொன்னையா பேரின்பராசா
திருப்பழுகாமம்,
பெரியபோரதீவு
மட்டக்களப்பு.
22.11.1969 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்







**கரும்புலி கப்படன்**
**கரிகாலன்**
இரத்தினசிங்கம்
அருளானந்தம்
தம்பலகாமம்,
திருமலை.
24.11.1973 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி கப்டன்**
**சிவலோகன்**
சின்னத்தம்பி
அருளானந்தம்
700, 7ம் வட்டாரம்
கொக்கட்டிச்சோலை.
05.06.1973 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கடற்கரும்புலி**
**கப்டன் சீராளன்**
ஞானப்பிரகாசம் ஏஞ்சல்
உயிர்த்தராசன்குளம்,
முருங்கன்
மன்னார்.
01.07.1975 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி லெப்.கண்ணன்**
நவரட்ணம்
நேசகுலேந்திரன்
உடுத்துறைவடக்கு,
தாழையடி
யாழ்ப்பாணம்.
24.06.1974 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி**
**லெப். வீரமணி**
தெய்வேந்திரம் சுதாகர்
வட்டுகிழக்கு,
வட்டுக்கோட்டை
யாழ்ப்பாணம்.
09.08.1976 -11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி**
**லெப்.செங்கண்ணன்**
தனுஸ்கோடி
செந்தூரபாண்டியன்
சாத்தூர், சிவகாசி
இந்தியா.
25.01.1975 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கடற்கரும்புலி மேஜர்**
**குமணன்/கோபி**
சுப்பிரமணியம்
செல்வலிங்கம்
பல்லவராயன்கட்டு
மன்னார்.
06.06.1973 - 12.11.1994
பூநகரி - நாகதேவன்
துறை இ.கடற்படைத்
தளம் மீதான ஒப்பரேசன்
தவளை நடவடிக்கையில்





**கரும்புலி கப்டன்**
**செந்தமிழ்நம்பி**
செல்லத்துரை ஜெகன்
சூசையப்பர்கோயிலடி,
கோப்பாய்
யாழ்ப்பாணம்.
-11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி கப்டன் ஐயனார்**
செல்வநாயகம்
இராசசேகரம்
அராலிகிழக்கு,
வட்டுக்கோட்டை
யாழ்ப்பாணம்.
26.12.1972 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி**
**லெப்.நல்லதம்பி**
தங்கராசா கோகுலநாதன்
கொக்கட்டிச்சோலை
முதலைக்குடா,
மட்டக்களப்பு.
- 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்



**கரும்புலி**
**லெப். ஜீவரஞ்சன்**
கிருஸ்ணபிள்ளை
முருகுப்பிள்ளை
253, தும்பக்கேணி
திக்கோடை மட்டக்களப்பு.
26.07.1972 - 11.11.1993
பூநகரி வெற்றிக்கு
உறுதுணையாக பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்தாக்கியதில்






**கரும்புலி லெப். ரங்கன்**
குணமாலை ரசிக்குமார்
கிளிநொச்சி
09.02.1976 - 02.08.1994
பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்
தாக்கியதில்



**கரும்புலி**
**மேஜர் திலகன்**
சுப்பையா ராஜ்
மட்டக்களப்பு
20.06.1975 - 02.08.1994
பலாலி விமானத்
தளத்தினுள்
ஊடுருவித்
தாக்கியதில்



**கரும்புலி**
**மேஜர் ஜெயம்**
குணநாயகம் தேவராசா
பள்ளிக்குடியிருப்பு,
மூதூர். திருமலை.
05.03.1976 -02.08.1994
பலாலி விமானத்
தளத்தினுள்
ஊடுருவித்
தாக்கியதில்



**கரும்புலி கப்டன் திரு**
கோணமலை முகுந்தன்
அம்பாறை
21.04.1974 - 02.08.1994
பலாலி விமானத்
தளத்தினுள்
ஊடுருவித்
தாக்கியதில்



**கரும்புலி**
**கப்டன் நவரட்ணம்**
சிறான்கோத் லெப்பேட்
அன்ரனிதாஸ்
செட்டிகுளம், வவுனியா
22.09.1977 - 02.08.1994
பலாலி
விமானத்தளத்தினுள்
ஊடுருவித்
தாக்கியதில்







**முதல் பெண் கடற்கரும்புலி**
**கப்டன் அங்கயற்கன்னி**
புஸ்பகலா துரைசிங்கம்
மண்கும்பான்மேற்கு,
வேலனை யாழ்ப்பாணம்
10.05.1973 - 10.08.1994
காங்கேசன்துறை கடற்
பரப்பில் கடற்படையினரின்
கட்டளைக்கப்பலையும்
டோறாபடகையும்
தகர்த்ததில்.



**கடற்கரும்புலி**
**லெப். கேணல் நளாயினி**
பத்மாவதி ஆறுமுகம்
ஊறனி வல்வை
யாழ்ப்பாணம்
07.01.1972 - 19.09.1994
சிலாவத்துறை
கற்பிட்டி கடற்பரப்பில்
படையினரின்
சாகரவர்த்தனா
கப்பலைத் தகர்த்ததில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் மங்கை**
புவனேஸ்வரி
கணபதிப்பிள்ளை
முள்ளியான்,
யாழ்ப்பாணம்.
16.12.1965 - 19.09.1994
சிலாவத்துறை கற்பிட்டி
கடற்பரப்பில் படையினரின்
சாகரவர்த்தனா கப்பலைத்
தகர்த்ததில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் கதிரவன்**
கோவிந்தன் சிவராசா
பரந்தன்,
கிளிநொச்சி.
26.07.1973 - 19.04.1995
திருமலை கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி
ரணசுறு சூரையா
கப்பலைத் தகர்த்தலில்.





**கடற்கரும்புலி மேஜர்**
**தணிகைமாறன்**
அன்ரன் பெனடிக்
கட்டைக்காடு,
யாழ்ப்பாணம்.
28.06.1970 - 19.04.1995
திருமலை கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி ரணசுறு
சூரையா கப்பலைத்
தகர்த்தலில்.



**கடற்கரும்புலி கப்டன் சாந்தா**
விஜயதேவி
சிவசுப்பிரமணியம்
புங்குடுதீவு,
யாழ்ப்பாணம்.
25.08.1975 - 19.04.1995
திருமலை கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி ரணசுறு
சூரையா கப்பலைத்
தகர்த்தலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் தங்கன்**
வீரையா மயில்வாகனம்
பதுளை
01.01.1975 - 16.07.1995
காங்கேசன்
துறைமுகத்தினுள்
ஊடுருவி
கடற்படையினரின்
போர்க்கப்பலைத்
தகர்த்தலில்.





**கடற்கரும்புலி**
**கப்டன்**
**வாமன்/தூயமணி**
கந்தசாமி ரவிநாயகம்
மட்டக்களப்பு.
22.08.1974 - 19.09.1994
சிலாவத்துறை கற்பிட்டி
கடற்பரப்பில் படையினரின்
சாகரவர்த்தனா கப்பலைத்
தகர்த்ததில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் லக்ஸ்மன்**
குகதாசன் பிரணவன்
முதலியார் ஒழுங்கை
நல்லூர்தெரு,
யாழ்ப்பாணம்.
05.07.1974 - 19.09.1994
சிலாவத்துறை கற்பிட்டி
கடற்பரப்பில் படையினரின்
சாகரவர்த்தனா கப்பலைத்
தகர்த்ததில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் நித்தி**
சந்தானம் யோகேஸ்வரன்
குடாரப்பு நாகர்கோயில்,
யாழ்ப்பாணம்.
05.10.1971 - 08.11.1994
வெற்றிலைக்கேணி
கடற்பரப்பில்
சி. படையினரின்
தரையிறங்கும் கப்பல்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் மதுசா**
இராசலட்சுமி முருகேசு
கல்வம்பத்தை திரியாய்
திருமலை
25.05.1975 - 19.04.1995
திருமலை கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி
ரணசுறு சூரையா
கப்பலைத் தகர்த்தலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் செந்தாளன்**
பிரான்சிஸ் டக்ளஸ்
கடற்கரைவீதி
குருநகர், யாழ்ப்பாணம்.
17.11.1974 - 16.07.1995
காங்கேசன்துறை
முகத்தினுள் ஊடுருவி
கடற்படையினரின்
போர்க்கப்பலைத்
தகர்த்தலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**தமிழினி**
கனிமொழி சிவப்பிரகாசம்
ஆதிகோவிலடி, வல்வை
யாழ்ப்பாணம்.
30.12.1974 - 16.07.1995
காங்கேசன் துறை
முகத்தினுள் ஊடுருவி
கடற்படையினரின்
போர்க்கப்பலைத்
தகர்த்தலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் கண்ணாளன்**
விநாயகம் இளையதம்பி
புதுக்குடியிருப்பு
வாழைச்சேனை,
மட்டு.
03.05.1973 - 03.09.1995
திருமலை - புல்மோட்டைக்
கடற்பரப்பில் டோறா
பீரங்கிப்படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**நகுலன்/தோமன்**
கந்தையா கிருஸ்ணதாஸ்
கடற்கரைவீதி,
குருநகர்,
யாழ்ப்பாணம்.
31.07.1973 - 03.09.1995
திருமலை - புல்மோட்டைக்
கடற்பரப்பில் டோறா
பீரங்கிப்படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**அருள்ஜோதி**
சியாமளா முத்துலிங்கம்
மூளாய்வீதி, சுண்டுக்குளி
யாழ்ப்பாணம்.
11.05.1976 - 10.09.1995
யாழ்- காங்கேசன்துறை
துறைமுகத்தினுள்
தரித்து நின்ற
தரையிறங்கும்
கலம்மீதான தாக்குதலில்.







**கரும்புலி**
**மேஜர் கீர்த்தி**
வல்லிபுரம்
நகுலேஸ்வரன்
பளை, யாழ்ப்பாணம்.
04.09.1975 - 20.09.1995
யாழ் -காங்கேசன்துறை
துறைமுகக்
கடற்பரப்பில்
லங்காமுடித கப்பல்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன் சிவா**
கிருஸ்ணபிள்ளை
மோகனதாஸ்
அம்மன் கோவிலடி
மண்டைதீவு,
யாழ்ப்பாணம்.
01.01.1976 - 20.09.1995
யாழ் - காங்கேசன்துறை
துறைமுகக் கடற்பரப்பில்
லங்காமுடித கப்பல்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**அன்பு/அந்தமான்**
இராமசாமி இராஜ்பவன்
அல்வாய் மேற்கு
பருத்தித்துறை,
யாழ்ப்பாணம்.
22.01.1975 - 20.09.1995
யாழ் - காங்கேசன்துறை
துறைமுகக் கடற்பரப்பில்
லங்காமுடித கப்பல்
மீதான தாக்குதலில்.





**கடற்கரும்புலி**
**கப்டன் ரூபன்**
சுப்பிரமணியம் சுதர்சன்
கொடுவாமடு, செங்கலடி
மட்டக்களப்பு.
09.07.1973 - 17.10.1995
திருமலை
துறைமுகத்தினுள்
தரித்துநின்ற
டோறாபடகு மீதான
தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன் சிவகாமி**
இராசகுமாரி-
சண்முகலிங்கம்
நாகர்கோயில்வடக்கு,
யாழ்ப்பாணம்.
01.01.1975 - 17.10.1995
திருமலை
துறைமுகத்தினுள்
தரித்துநின்ற டோறாபடகு
மீதானதாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன்சிறைவாசன் /திலீப்**
நாராயணபிள்ளை-
விக்கினேஸ்வரன்
பிள்ளையாரடி, கொக்குவில்,
மட்டக்களப்பு.
19.09.1974 - 29.10.1995
யாழ் - அளவெட்டி பகுதியில்
ஊடுருவி இராணுவ
நிலைகள்
மீதான தாக்குதலில்



**கடற்கரும்புலி கப்டன்**
**அகத்தி**
இராமநாதன் நடராசா
கல்முனை 1ம் குறுச்சி,
அம்பாறை
25.10.1970 - 29.10.1995
யாழ் - அளவெட்டி
பகுதியில்
ஊடுருவி இராணுவ
நிலைகள்
மீதான தாக்குதலில்





**கடற்கரும்புலி கப்டன்**
**செவ்வானம்**
சுமதி கிருஸ்ணபிள்ளை
மூளாய்தெற்கு,
சுழிபுரம்,
யாழ்ப்பாணம்.
22.01.1974 - 20.09.1995
யாழ் - காங்கேசன்துறை
துறைமுகக் கடற்பரப்பில்
லங்காமுடித கப்பல்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் அருமை**
செல்லத்துரை -
விஜயானந்தன்
புத்துவெட்டுவான்,
கிளிநொச்சி.
23.12.1972 - 02.10.1995
முல்லைக் கடற்பரப்பில்
கடற்படையினரின்
தரையிறங்கு
கலம் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் தணிகை**
வதனா கணபதிப்பிள்ளை
04 றக்காவீதி,
யாழ்ப்பாணம்.
13.07.1976 - 02.10.1995
முல்லைக் கடற்பரப்பில்
கடற்படையினரின்
தரையிறங்கு
கலம் மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் சிவசுந்தர்**
சித்திரவேல்-
இராமச்சந்திரன்
உப்புவெளி,திருமலை.
12.12.1974 - 17.10.1995
திருமலை
துறைமுகத்தினுள்
தரித்துநின்ற
டோறா படகு மீதான
தாக்குதலில்





**கரும்புலி**
**லெப் கலைச்செல்வன்**
ஆறுமுகம் சந்திரகுமார்
அவிசாவளை.
13.08.1974 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கடற்கரும்புலி கப்டன்**
**ஜீவன்/தினகரன்**
கணபதிப்பிள்ளை -
இராமனேஸ்வரன்
பார்வீதி, திராய்,
மடுக்கொலனி, மட்டக்களப்பு.
01.01.1971 - 29.10.1995
யாழ் -அளவெட்டிபகுதியில்
ஊடுருவி இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி கப்டன் ஈழவன்**
திருச்செல்வம்
றொபேட்சன்
நவாலிதெற்கு,
மானிப்பாய்,
யாழ்ப்பாணம்.
23.07.1973 - 29.10.1995
யாழ் -அளவெட்டிபகுதியில்
ஊடுருவி இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி வேணுதாஸ்**
கந்தப்போடி தருமன்
கொக்கட்டிச்சோலை,
மட்டக்களப்பு.
22.01.1973 - 29.10.1995
யாழ் -அளவெட்டிபகுதியில்
ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி லெப்**
**நளினன்/கோவிந்தன்**
திசநாயகம் உதயதாசன்
தம்விலுவில், 1ம்குறுச்சி
அம்பாறை.
27.11.1976 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்







**கரும்புலி லெப் தொண்டன்**
இராசரத்தினம் -
கிருஸ்ணராஜ்
கச்சாய் வீதி
சாவகச்சேரி, யாழ்ப்பாணம்.
16.04.1976 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி லெப்.**
**தங்கத்துரை/ராகுலன்**
சீவரத்தினம் காந்தரூபன்
நீர்வேலி, வசாவிளான்
யாழ்ப்பாணம்.
02.08.1976 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி லெப் சசிக்குமரன்**
செல்வராசா றொபின்சன்
எழுதுமட்டுவாள்,
யாழ்ப்பாணம்.
05.06.1977 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள்
மீதான
தாக்குதலில்





**கடற்கரும்புலி**
**மேஜர் ஜெகநாதன்**
சங்கரப்பிள்ளை -
தவராசா
கறுக்காய்தீவு, பூநகரி,
மன்னார்.
08.10.1972 - 30.03.1996
சுண்டிக்குளம் கடற்
பரப்பில் கடற்படையின
ரின் டோறா படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் இளையவள்**
இராஜமலர்-
இராசலிங்கம்
உவர்மலை,
கண்ணகிபுரம் திருமலை.
31.10.1974 - 30.03.1996
சுண்டிக்குளம் கடற்
பரப்பில் கடற்படையின
ரின் டோறா படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**பொய்யாமொழி**
விசுவாசம் டானியல்
கும்புறுப்பிட்டி,
திருமலை.
23.05.1971 - 12.04.1996
கொழும்புத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி மூன்று சரக்குக்
கப்பல்களைத் தகர்த்த
தாக்குதலில்.



**கடற்கரும்புலி லெப்.கேணல்**
**பிரதாபன்/ரதீஸ்**
அருமைச்சந்திரன்-
செந்தில்குமார்
வல்வை, யாழ்ப்பாணம்.
01.08.1974 - 12.04.1996
கொழும்புத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி மூன்று சரக்குக்
கப்பல்களைத் தகர்த்த
தாக்குதலில்.







**கரும்புலி 2ம் லெப்.**
**இசைச்செல்வன்**
நாகராசா சண்முகசீலன்
பண்டைத்தரிப்பு,
யாழ்ப்பாணம்.
01.01.1978 - 29.10.1995
யாழ் -அளவெட்டி
பகுதியில் ஊடுருவி
இராணுவ
நிலைகள் மீதான
தாக்குதலில்



**கரும்புலி**
**மேஜர் தினேஸ்குமார்/ரங்கன்**
ஜெஸ்டின் யூட்நெவில்
மாங்கேணி
வாழைச்சேனை, மட்டு.
03.09.1973 - 05.12.1995
மட்டு - புதுக்குடியிருப்பு
விசேட அதிரடிப்படை
முகாம்
மீதான தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**லெப் கேணல் மதன்/**
**சோதித்தம்பி**
யோகச்சந்திரன் ரதீஸ்குமார்
கொத்தியால் ஒழுங்கை,
வல்வை, யாழ்ப்பாணம்.
12.05.1978 - 13.02.1996
திருமலை துறைமுகத்தில்
தரித்துநின்று
கடற்படையின்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் வேங்கை**
சூசைப்பிள்ளை-
செல்வக்குமார்
பொலிகண்டி, வல்வை
யாழ்ப்பாணம்.
29.12.1967 - 13.02.1996
திருமலை துறைமுகத்தில்
தரித்துநின்று கடற்படையின்
மீதான தாக்குதலில்.






**கடற்கரும்புலி**
**கப்டன் சுபாஸ்**
மாரிமுத்து வசந்தகுமார்
தம்பலகாமம்,
திருமலை.
28.01.1974 - 12.04.1996
கொழும்புத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**ஜனார்த்தனன்/வீணைக்கொடி**
**யோன்**
சிற்றம்பலம்-கிருஸ்ணதாஸ்
காங்கேசன்துறை,
யாழ்ப்பாணம்.
21.12.1971 - 12.04.1996
கொழும்புத் துறைமுகத்தி
னுள் ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**தென்னமுதன்/பரன்**
நாகேந்திரன் தங்கராசா
பருத்தித்துறை,
யாழ்ப்பாணம்.
25.09.1975 - 12.04.1996
கொழும்புத் துறைமுகத்தி
னுள் ஊடுருவி
மூன்று சரக்குக்
கப்பல்களைத் தகர்த்த
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**வளநாடன்/பவாஸ்**
திருச்செல்வம் -
கிளைமென்ற்
அல்வாய் மேற்கு,
யாழ்ப்பாணம்.
28.08.1975 - 12.04.1996
கொழும்புத் துறைமுகத்தி
னுள் ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் ரதன்**
வேலுப்பிள்ளை -
சுரேன்ராஜன்
845 செல்வநாயகபுரம்,
திருமலை.
23.12.1972 - 12.04.1996
கொழும்புத் துறைமுகத்தி
னுள் ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.








**கரும்புலி கப்டன் மதனி**
தெய்வநந்தினி -
கணபதிப்பிள்ளை
நாகர்கோவில்
வெற்றிலைக்கேணி, யாழ்.
20.11.1976 - 12.04.1996
கொழும்புத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் விக்கி**
சுமதி இராசரத்தினம்
தாழையடி உடுத்துறை
யாழ்ப்பாணம்.
14.04.1975 - 12.04.1996
கொழும்புத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி மூன்று
சரக்குக் கப்பல்களைத்
தகர்த்த தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**ஜீவரஞ்சன்/இளங்கோ**
பொன்னையா-
தமிழ்ச்செல்வன்
பரனாட்டான்கல்
ஓமந்தை, வவுனியா.
21.03.1974 - 11.06.1996
யாழ் -காரைநகர் கடற்படைத்
தளத்தின் சவட்டன் ரோந்துப்
படகையும் ஒரு பேபி டோறாப்
படகையும் தகர்த்த
தாக்குதலில்.





**கடற்கரும்புலி**
**மேஜர் சுடரொளி**
இரத்தினமலர்-
செபமாலை
மாதகல், யாழ்ப்பாணம்.
20.11.1972 - 19.07.1996
முல்லைத்தீவு
இராணுவத்தளம்
மீது மேற்கொள்ளப்பட்ட
ஓயாத அலைகள்-01
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் மிதுபாலன்**
வேதாரணியம்- ஜெயகாந்தன்
ஆஸ்பத்திரிவீதி,
யாழ்ப்பாணம்.
23.05.1975 - 21.07.1996
யாழ் - காரைநகர்
கடற்படைத்தளத்தில் சவட்டன்
ரோந்துப்படகையும் ஒரு பேபி
டோறாப்படகையும் தகர்த்த
தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன் சயந்தன்**
தம்பிப்பிள்ளை-
இராசரத்தினம்
அக்கரைப்பற்று, அம்பாறை.
23.04.1972 - 21.07.1996
யாழ் - காரைநகர்
கடற்படைத்தளத்தில்
சவட்டன் ரோந்துப்படகையும்
ஒரு பேபிடோறாபடகையும்
தகர்த்த தாக்குதலில்



**கடற்கரும்புலி மேஜர்**
**நளினன்**
தெய்வேந்திரன்-
யோகேஸ்வரன்
மூதூர், திருமலை.
12.12.1975 - 25.10.1996
திருமலை
துறைமுகத்தினுள்
டோறா அதிவேகப்படகு
மீதான
தாக்குதலில்.





**கடற்கரும்புலி மேஜர்**
**கண்ணபிரான்/அப்துல்லா**
சாமித்தம்பி புலேந்திரன்
அம்பாறை
01.01.1974 - 19.07.1996
முல்லைத்தீவு
இராணுவத்தளம்
மீது
மேற்கொள்ளப்பட்ட
ஓயாத அலைகள் -01
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**செல்லப்பிள்ளை**
இராமலிங்கம் செல்வராசா
நறுவிலிக்குளம்,
வங்காலை, மன்னார்.
08.08.1973 - 19.07.1996
முல்லைத்தீவு
இராணுவத்தளம்
மீது மேற்கொள்ளப்பட்ட
ஓயாத அலைகள் -01
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**பார்த்தீபன்/வேதமணி**
உலகநாதன் ரமேஸ்
தட்டாதெரு பருத்தித்
துறை, யாழ்ப்பாணம்.
22.07.1977 - 19.07.1996
முல்லைத்தீவு
இராணுவத்தளம்
மீது மேற்கொள்ளப்பட்ட
ஓயாத அலைகள் -01
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் பதுமன்**
ஆனந்தமயில் பாலமுரளி
நாகர்கோயில் வடக்கு,
யாழ்ப்பாணம்.
18.06.1976 - 19.07.1996
முல்லைத்தீவு
இராணுவத்தளம்
மீது மேற்கொள்ளப்பட்ட
ஓயாத அலைகள் -01
தாக்குதலில்.



**கரும்புலி மேஜர்**
**சிற்றம்பலம்குமார்**
இராசேந்திரம் சதயகுமார்
சுதுமலை
அம்மன்கோயிலடி,
யாழ்ப்பாணம்.
23.07.1974 - 06.03.1997
திருமலை சீனன்குடா
விமானத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கடற்கரும்புலி கப்டன்**
**ஜெயராஜ்/பெரியதம்பி**
கந்தசாமி
கோபாலகிருஸ்ணன்
காரைநகர்,
யாழ்ப்பாணம்.
02.04.1975 - 25.10.1996
திருமலை துறைமுகத்தி
னுள் டோறா அதிவேகப்
படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் பாரதி**
கமலராணி வீரகத்தி
நாகர்கோயில்,
யாழ்ப்பாணம்.
30.09.1972 - 11.11.1996
காரைநகர்
கடற்படைத்தளத்துக்
கருகில் டோறா படகை
தகர்த்த
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் இன்னிசை**
சுமதி இராசதுரை
வெற்றிலைக்கேணி,
யாழ்ப்பாணம்.
19.10.1977 - 11.11.1996
காரைநகர்
கடற்படைத்தளத்துக்
கருகில் டோறா படகை
தகர்த்த
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் மாலிகா**
செல்வராணி ஆறுமுகம்
அல்வாய் வடக்கு,
யாழ்ப்பாணம்.
05.11.1974 - 08.12.1996
திருமலைத்
துறைமுகத்தினுள்
ஊடுருவி அதிவேக
ரோந்துப்படகு மீதான
தாக்குதலில்







**கரும்புலி**
**கப்டன் நிவேந்தன்**
சுப்பிரமணியம்-
சுபேஸ்வரன்
மட்டக்களப்பு
19.09.1978 - 06.03.1997
திருமலை
சீனன் குடா
விமானத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி**
**கப்டன் விஜரூபன்**
கந்தசாமி சிவகுணம்
மட்டக்களப்பு.
13.02.1975 - 06.03.1997
திருமலை
சீனன் குடா
விமானத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**தமிழ்மாறன்**
இராசையா மதியழகன்
யாழ்ப்பாணம்.
08.05.1976 - 24.03.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்படையினருடனான
கரும்புலித்
தாக்குதலில்.





**கரும்புலி**
**மேஜர் யாழினி**
ராகினி -
சிவசுப்பிரமணியம்
உரும்பிராய்,
யாழ்ப்பாணம்.
05.02.1971 - 10.06.1997
வவுனியா -
தாண்டிக்குளம் இராணுவ
விநியோகமையம் மீதான
ஊடுருவித் தாக்குதலில்.



**கரும்புலி கப்டன்**
**சாதுரியன்**
நடராசா அரசரட்ணம்
மட்டக்களப்பு.
01.01.1977 - 10.06.1997
வவுனியா -
தாண்டிக்குளம்
இராணுவ
விநியோகமையம் மீதான
ஊடுருவித்
தாக்குதலில்



**கடற்கரும்புலி மேஜர்**
**சிறி/திருமாறன்**
கணேசபிள்ளை
ரவிச்சந்திரன்
சிவன்கோயிலடி,
யாழ்ப்பாணம்.
05.09.1970 - 18.10.1997
திருமலை -புல்மோட்டை
கடற்பரப்பில் டோறா
படகு மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**சின்னவன்**
நந்தகோபால் சுரேஸ்
கொக்குவில்,
யாழ்ப்பாணம்.
25.06.1976 - 18.10.1997
திருமலை
-புல்மோட்டை
கடற்பரப்பில்
டோறா படகு
மீதான தாக்குதலில்.







**கடற்கரும்புலி**
**மேஜர் மதீஸ்/நாவண்ணன்**
கந்தையா முருகையா
திருவையாறு,
கிளிநொச்சி.
15.10.1972 - 24.03.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்படையினருடனான
கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**கலைவள்ளி**
சசிந்திரா ஆறுமுகம்
அராலி கிழக்கு,
யாழ்ப்பாணம்.
29.06.1976 - 24.03.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்படையினருடனான
கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் வானதி**
கலைவாணி இராசையா
தர்மபுரம்,
கிளிநொச்சி.
28.04.1977 - 24.03.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்படையினருடனான
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி மேஜர்**
**நீதன்/பர்வதன்**
மாணிக்கன் அருள்ராசா
கொக்கட்டிச்சோலை,
மட்டக்களப்பு.
26.01.1970 - 10.06.1997
வவுனியா -
தாண்டிக்குளம் இராணுவ
விநியோகமையம்
மீதான
ஊடுருவித் தாக்குதலில்





**கடற்கரும்புலி**
**மேஜர் வினோதா**
தேவசிகாமணி-
விஜயகுமாரி
வல்வெட்டித்துறை,
யாழ்ப்பாணம்.
09.11.1976 - 27.05.1997
முல்லைக்கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு
விபத்தின்போது.



**கடற்கரும்புலி**
**கப்டன் பாலன்**
சோமசுந்தரம் திலீபன்
கிருஸ்ணன் கோவில் வீதி,
அம்பாறை.
03.09.1974 - 28.06.1997
திருமலை
கடற்பரப்பில்
ஏற்பட்ட படகு
விபத்தின்போது.



**கடற்கரும்புலி**
**மேஜர் அன்பு**
முத்துவேல் ரவிச்சந்திரன்
முருங்கன்,
மன்னார்.
06.10.1973 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு
விபத்தின்போது.



**கடற்கரும்புலி**
**மேஜர் இளமகன்**
தர்மலிங்கம்
திருக்கணேசன்
மட்டக்களப்பு.
12.03.1973 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு
விபத்தின்போது.



**கடற்கரும்புலி**
**மேஜர் வலம்புரி**
கைலாசபிள்ளை புஸ்பவதி
அநுராதபுரம்
18.01.1977 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு
விபத்தின்போது.








**கடற்கரும்புலி மேஜர்**
**சந்திரா**
தம்பு செபஸ்ரியன்-
மரியகொறற்றி
குருநகர்,
யாழ்ப்பாணம்.
19.12.1975 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு விபத்தின் போது.



**கடற்கரும்புலி கப்டன்**
**சுதாகர்**
கனகசபை அருள்
மொறக்கொட்டாஞ்சேனை,
மட்டக்களப்பு.
26.04.1976 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு விபத்தின்போது.



**கடற்கரும்புலி கப்டன்**
**அருளரசன்**
தங்கராசா தியாகராசா
கழுதாவளை,
மட்டக்களப்பு.
27.03.1977 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு விபத்தின்போது.



**கரும்புலி மேஜர் மங்கை**
இரத்தினசிங்கம்-
நேசமலர்
இராமநாதபுரம்,
கிளிநொச்சி.
28.03.1974 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கரும்புலி**
**மேஜர் ஜெயராணி**
நடராசா சாந்தி
பரப்புக்கடந்தான்,
யாழ்ப்பாணம்.
18.12.1973 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன் குமணன்**
ஜெகநாதன் ரவிச்சந்திரன்
ஜெயபுரம்,
பல்லராயன்கட்டு,
மன்னார்.
19.09.1978 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன்**
**நெடியோன்**
குலேந்திரன் ஞானசங்கர்
தெல்லிப்பளை,
யாழ்ப்பாணம்.
04.08.1975 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்.





**கடற்கரும்புலி**
**கப்டன் சித்தா**
பாலசிங்கம் சிற்றூபன்
சுழிபுரம்,
யாழ்ப்பாணம்.
10.11.1969 - 27.05.1997
முல்லைக்
கடற்பரப்பில்
கடற்கரும்புலிகளின்
படகு விபத்தின் போது.



**கரும்புலி லெப்.கேணல்**
**சுபேசன்/கிள்ளிவளவன்**
மருசலிம் அல்வின்
முருங்கன்,
மன்னார்.
02.07.1971 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கரும்புலி மேஜர் குமுதன்**
மயில்வாகனம்-
இன்பராஜன்
மானிப்பாய்,
யாழ்ப்பாணம்.
30.10.1972 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கரும்புலி மேஜர் ஆசா**
வேலுப்பிள்ளை
சிவயமுனா
சாவக்காடு,
யாழ்ப்பாணம்.
11.11.1976 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்



**கரும்புலி**
**கப்டன் நளா**
பெருமாள் கலைநிதி
கொல்லங்கலட்டி,
யாழ்ப்பாணம்.
26.07.1978 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன் அருள்**
அம்பிகாபதி அருட்சோதி
நாரந்தனை,
யாழ்ப்பாணம்.
18.11.1978 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன் இந்து**
கந்தையா புனிதா
அக்கரைப்பற்று,
அம்பாறை.
04.12.1978 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன் செங்கதிர்**
ஜெயரட்ணம் ஜெயந்திரா
வசாவிளான்,
யாழ்ப்பாணம்.
- 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி கப்டன்**
**நளாயினி**
பழனி கோகிலா
நெடுங்கேணி,
முல்லைத்தீவு.
12.10.1979 - 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.








**கரும்புலி கப்டன் உமையாள்**
செல்லத்துரை புஸ்பராணி
எழுதுமட்டுவாள்,
யாழ்ப்பாணம்.
- 01.02.1998
கிளி.பரந்தன்
-ஆனையிறவு
இராணுவத்தளம்
மீதான கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் கரன்**
பாலசுந்தரம் -
கோபாலகிருஸ்ணன்
மன்னம்பிட்டி,
பொலநறுவை.
07.05.1972 - 22.02.1998
பருத்தித்துறை -காங்கே
சன்துறை கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி கலங்
கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**தமிழினியன்**
நடராசா கிருபாகரன்
யாழ்ப்பாணம்.
24.11.1974 - 22.02.1998
பருத்தித்துறை -
காங்கேசன்துறை
கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி
கலங்கள் மீதான
தாக்குதலில்.





**கடற்கரும்புலி மேஜர்**
**மொறிஸ்/தமிழின்பன்**
தர்மபாலசிங்கம்- தயாபரன்
காரைநகர்,
யாழ்ப்பாணம்.
19.06.1976 - 22.02.1998
பருத்தித்துறை -
காங்கேசன்துறை
கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி கலங்
கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் ஜனார்த்தனி**
கைலாயநாதன் சுகந்தி
முள்ளியவளை,
முல்லைத்தீவு.
01.12.1977 - 22.02.1998
பருத்தித்துறை -
காங்கேசன்துறை
கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி கலங்
கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் நங்கை**
பட்டுராசா கௌசலா
கொட்டடி,
யாழ்ப்பாணம்.
28.05.1977 - 22.02.1998
பருத்தித்துறை -
காங்கேசன்துறை
கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி கலங்
கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் வனிதா**
கந்தையா புஸ்பராணி
நெடுங்கேணி,
வவுனியா.
30.08.1977 - 22.02.1998
பருத்தித்துறை -
காங்கேசன்துறை
கடற்பரப்பில்
'பப்தா' , வலம்புரி கலங்
கள் மீதான தாக்குதலில்.







**கடற்கரும்புலி**
**மேஜர் சுலோசன்**
நடராசா கிருபாகரன்
மூதூர்,திருமலை.
05.07.1974 - 22.02.1998
பருத்தித்துறை - காங்கேசன்துறை கடற்பரப்பில் 'பப்தா' , வலம்புரி கலங்கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் குமரேசன்**
துரைராசா செல்வகுமார்
பூந்தோட்டம்,
வவுனியா.
05.02.1975 - 22.02.1998
பருத்தித்துறை - காங்கேசன்துறை கடற்பரப்பில் 'பப்தா' , வலம்புரி கலங்கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் வள்ளுவன்**
செல்வராசா தவராசா
காங்கேசன்துறை,
யாழ்ப்பாணம்.
14.01.1976 - 22.02.1998
பருத்தித்துறை - காங்கேசன்துறை கடற்பரப்பில் 'பப்தா' , வலம்புரி கலங்கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**தமிழ்மங்கை**
துரைராசா சத்தியவாணி
வெட்டுக்காடு,
பூநகரி, மன்னார்.
03.08.1973 - 22.02.1998
பருத்தித்துறை - காங்கேசன்துறை கடற்பரப்பில் 'பப்தா' , வலம்புரி கலங்கள் மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் பூங்குழலி**
சாமிநாதன் சின்னமலர்
நெடுந்தீவு,
யாழ்ப்பாணம்.
08.08.1976 - 18.04.1998
திருமலை - கொக்கிளாய் கடற்பரப்பில் ஏற்பட்ட மோதலின் போது கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் மேகலா**
தவராசா தமயந்தி
வல்வெட்டித்துறை,
யாழ்ப்பாணம்.
08.02.1971 - 22.02.1998
பருத்தித்துறை- காங்கேசன்துறை கடற்பரப்பில் 'பப்தா' , வலம்புரி கலங்கள் மீதான தாக்குதலில்.



**சிறு.கடற்கரும்புலி கப்டன்**
**இசையாளன்**
சுந்தர்ராஜ் ரவிராஜ்
இரத்தினபுரம்,
கிளிநொச்சி.
07.09.1978 - 11.03.1998
திருமலை துறைமுகத்தினுள் ஊடுருவி நடத்திய கரும்புலித் தாக்குதலில்.



**சிறு.கடற்கரும்புலி**
**கப்டன் கோபி**
செபஸ்ரியான் அகஸ்ரின்
நுவரெலியா.
07.01.1978 - 11.03.1998
திருமலை துறைமுகத்தினுள் ஊடுருவி நடத்திய கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**ஈழவன்/ ஈழவேந்தன்**
ஆறுமுகம் வீரசிங்கம்
யாழ்ப்பாணம்.
15.03.1978 - 18.04.1998
திருமலை - கொக்கிளாய் கடற்பரப்பில் ஏற்பட்ட மோதலின் போது கரும்புலித்தாக்குதலில்.







**கரும்புலி**
**மேஜர் நிலவன்**
சூரியகுமார் திலீபன்
கோப்பாய் வடக்கு,
யாழ்ப்பாணம்.
20.11.1976 - 14.10.1998
ஆனையிறவு
இராணுவத் தளம்
மீது ஊடறுத்து
மேற்கொண்ட
தாக்குதலில்.



**கரும்புலி**
**மேஜர் அரசப்பன்**
மயில்வாகனம் -
அருட்செல்வன்
கில்மன்வீதி சந்திவெளி,
மட்டக்களப்பு.
06.11.1978 - 29.05.1999
மட்டுநகர் பகுதியில்
தேசவிரோதிகள் மீது
மேற்கொண்ட
தாக்குதலில்.



**கரும்புலி**
**மேஜர் இரட்ணாதரன்**
குமாரசாமி ஆனந்தா
கோடைமேடு,
களுவாஞ்சிக்குடி, மட்டு.
05.04.1975 - 09.08.1999
மட்டு வாகரை
பகுதியில்
இராணுவமுகாம் 2வது
கட்டளை அதிகாரி மீதான
தாக்குதலில்.





**கடற்கரும்புலி மேஜர்**
**பரணி/கோபி**
சூரியயோகானந்தம்-
அமர்நாத்
நாவலடி, மயிலிட்டி,
யாழ்ப்பாணம்.
14.11.1971 - 14.10.1999
கொக்குளாய் கடற்
பரப்பில் கடற்படையுடன்
ஏற்பட்டமோதலின்
போது படகு விபத்தில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**கலைமகள்**
அரியகுட்டி கலைமதி
அச்சுவேலி தெற்கு,
யாழ்ப்பாணம்.
21.07.1972 - 14.10.1999
கொக்குளாய்
கடற்பரப்பில்
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலின்போது
படகு விபத்தில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் சூரியப்பிரபா**
அல்போன்ஸ்ராஜா-
ஜான்சிராணி
இளவாலை, யாழ்ப்பாணம்.
01.06.1972 - 14.10.1999
கொக்குளாய்
கடற்பரப்பில்
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலின்போது
படகு விபத்தில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**சுதாகரன்/ சுதா**
இராசநாயகம் பிரசன்னா
மூத்தவிநாயகர்
கோவிலடி, நல்லூர்,
யாழ்ப்பாணம்.
28.11.1980 - 14.10.1999
கொக்குளாய் கடற்
பரப்பில் கடற்படையுடன்
ஏற்பட்டமோதலின்
போது படகு விபத்தில்.





**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் நீதியப்பன்**
வீரபாகு சிவனேஸ்வரன்
திருமலை.
15.10.1977 - 15.08.1999
திருமலை
புல்மோட்டை
கடற்பரப்பில்
அதிவேக டோறா படகு
மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் எழில்வேந்தன்/**
**அந்தமான்**
வடிவேல் செந்தில்குமார்
மட்டு.
17.07.1978 - 15.08.1999
திருமலை புல்மோட்டை
கடற்பரப்பில்
அதிவேக டோறா படகு
மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் அருந்தவம்**
கிருஸ்ணபிள்ளை-
உதயகுமார்
பெண்டுகள்சேனை,
மட்டு.
09.11.1974 - 14.10.1999
கொக்குளாய் கடற்பரப்பில்
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலின்போது
படகு விபத்தில்.



**கடற்கரும்புலி லெப்.கேணல்**
**பழனியப்பன்/புவனேந்திரன்**
ரங்கையா யோகேந்திரன்
1ம் யூனிற், பாவற்குளம்,
வவுனியா.
10.08.1971 - 14.10.1999
கொக்குளாய்
கடற்பரப்பில்
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலின்போது
படகு விபத்தில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் வீரமணி**
கணபதிப்பிள்ளை
கதிர்காமநாதன்
9/1 கந்தர்மடம்,
யாழ்ப்பாணம்.
08.08.1974 - 12.04.1999
மன்னார்
கடற்பரப்பில்
கடற்படையுடனான
மோதலின்போது.



**கரும்புலி மேஜர்**
**செங்கதிர்வாணன்**
நடராசா ரமேஸ்வரன்
40 /30, சிவபுரி,
திருமலை.
23.12.1972 - 29.11.1999
மணலாறுப்
பகுதியில்
இராணுவத்துடன்
ஏற்பட்ட
மோதலில்.



**கரும்புலி**
**மேஜர் அருளன்**
நந்தகோபால் துஸ்யந்தன்
சங்கரப்பிள்ளை வீதி,
ஆனைக்கோட்டை,
யாழ்ப்பாணம்.
06.10.1977 - 05.11.1999
நெடுங்கேணிப்
பகுதியில் ஓயாத
அலைகள் 03 வெற்றிச்
சமரின் போது.



**கரும்புலி மேஜர் சசி**
இராசாரத்தினம்-
சுகந்தினி
சங்கானை மேற்கு,
யாழ்ப்பாணம்.
08.04.1978 - 05.11.1999
நெடுங்கேணிப்
பகுதியில் ஓயாத
அலைகள் 03
வெற்றிச் சமரின்
போது.



**கடற்கரும்புலி மேஜர்**
**முத்துமணி**
குமாரசாமி சிவகாவேரி
யாழ்ப்பாணம்.
10.06.1975 - 04.11.1999
முல்லை
மாவட்டத்தில்
ஏற்பட்ட
விபத்தின்
போது.









**கரும்புலி மேஜர் மீனா**
நடராசா மேனகா
அசோக் வீதி,
இடைக்குறிச்சி,
வரணி, யாழ்ப்பாணம்.
23.12.1978 - 25.12.1999
இயக்கச்சி
பகுதியில் ஓயாத
அலைகள் 03 தொடர்
தாக்குதலின்
போது.



**கடற்கரும்புலி லெப்.கேணல் சிவரூபன்/கார்வண்ணன்**
சிவநேசன் -
சிவபாக்கியநாதன்
கெற்பலிமேற்கு, மிருசுவில்,
யாழ்ப்பாணம்.
07.04.1975 - 08.12.1999
முல்லை கடற்பரப்பில்
அதிவேக சுப்பர் டோறா
மீதான தாக்குதலின்
போது.



**கடற்கரும்புலி மேஜர் றங்கன்/ யாழ்வேந்தன்**
கதிரவேல் ஜெயராம்
காரைநகர்,
யாழ்ப்பாணம்.
புதுக்குடியிருப்பு.
19.06.1971 - 08.12.1999
முல்லை கடற்பரப்பில்
அதிவேக சுப்பர் டோறா
மீதான தாக்குதலின்
போது.



**கடற்கரும்புலி மேஜர் இசைக்கோன்**
சிவசாமி சுகந்தன்
பருத்தித்துறை,
யாழ்ப்பாணம்.
08.05.1978 - 08.12.1999
முல்லை கடற்பரப்பில்
அதிவேக சுப்பர்
டோறா மீதான
தாக்குதலின்
போது.



**கரும்புலி கப்டன் நாகராணி**
அருமைநாயகம் றோகினி
பாடசாலைவீதி, தாவடி
தெற்கு, கொக்குவில்,
யாழ்ப்பாணம்.
19.05.1977 - 25.12.1999
இயக்கச்சி பகுதியில்
ஓயாத அலைகள் 03
தொடர் தாக்குதலின்
போது.



**கடற்கரும்புலி கப்டன் அறிவரசன்/அறிவு**
முத்துலிங்கம் ஜனகன்
வேலனை மேற்கு,
யாழ்ப்பாணம்.
07.09.1978 - 30.12.1999
கிளாலி
கடற்பரப்பில் அதிவேக
நீருந்து விசைப்படகு
மீதான
தாக்குதலின் போது.



**கடற்கரும்புலி மேஜர் நவநீபன்/இசையாளன்**
மரியநாயகம் ஜெயசீலன்
எழுதுமட்டுவாள்,
கிளாலி,
யாழ்ப்பாணம்.
07.04.1978 - 10.03.1999
தவறுதலான
வெடிவிபத்தின்
போது.









**கடற்கரும்புலி**
**கப்டன் கானவன்**
சிவஞானம் சிவகுமார்
முள்ளிவாய்க்கால்
மேற்கு,
முல்லைத்தீவு.
25.03.1977 - 08.12.1999
முல்லை கடற்பரப்பில்
அதிவேக சுப்பர்
டோறா மீதான
தாக்குதலின்போது.



**கரும்புலி மேஜர் செழியன்**
மகேந்திரராசா பாலமுரளி
அம்மன்கோவிலடி,
வல்வெட்டித்துறை,
யாழ்ப்பாணம்.
30.07.1974 - 11.12.1999
பரந்தன்
பகுதியில்
ஓயாத அலைகள் 03
தொடர் தாக்குதலின்
போது.



**கரும்புலி மேஜர் ஆதித்தன்**
பழனியாண்டி சுதாகரன்
பதுளை,
7ம் வட்டாராம்,
புதுக்குடியிருப்பு.
26.11.1979 - 25.12.1999
இயக்கச்சி
பகுதியில் ஓயாத
அலைகள் 03 தொடர்
தாக்குதலின்
போது.



**கடற்சிறுத்தை கரும்புலி**
**மேஜர் நந்தன்**
தர்மராசா தயாபாரன்
79, குமாரபுரம், பரந்தன்,
கிளிநொச்சி.
19.08.1978 - 25.12.1999
இயக்கச்சி
பகுதியில் ஓயாத
அலைகள் 03 தொடர்
தாக்குதலின்
போது.



**கடற்கரும்புலி**
**கப்டன் தினேஸ்**
வைரவநாதன் கஜாணனன்
கருகம்பனை, கீரிமலை,
காங்கேசன்துறை,
யாழ்ப்பாணம்.
23.05.1977 - 12.03.2000
மன்னார் கடற்பரப்பில்
பயிற்சியின்போது
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**தோழன்/திருச்செல்வன்**
சுப்பிரமணியம்
ராஜ்குமார்
கள்ளப்பாடு,
முல்லைத்தீவு.
30.19.1979 - 10.03.1999
தவறுதலான
வெடிவிபத்தின்
போது.



**கடற்கரும்புலி**
**மேஜர் ரூபன்**
சீனிவாசன் சிவானந்தன்
கிரான்,
மட்டக்களப்பு.
07.02.1977 - 01.02.2000
தமிழீழக்
கடற்பரப்பில்
பயிற்சியின்
போது



**கடற்கரும்புலி மேஜர் பரதன்**
சதாசிவம் சந்திரகுமார்
விநாயகபுரம்,
திருக்கோவில்,
அம்பாறை.
27.07.1974 - 12.03.2000
மன்னார்
கடற்பரப்பில்
பயிற்சியின்போது
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலில்.



**கடற்கரும்புலி மேஜர் மதன்**
சிதம்பரநாதன்
சிவாஜிநாதன்
மாவடிச்சேனை, மூதூர்,
திருமலை.
29.01.1979 - 12.03.2000
மன்னார்
கடற்பரப்பில்
பயிற்சியின்போது
கடற்படையுடன் ஏற்பட்ட
மோதலில்.







**கடற்கரும்புலி கப்டன்**
**மேஜர் தனுசன்**
தங்கராசா
இலங்கேஸ்வரன்
மூதூர்,திருமலை.
25.11.1974 - 26.03.2000
ஓயாத அலைகள் 03
தொடர்
தாக்குதலின் போது
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி**
**மேஜர் சுதாஜினி**
தெய்வேந்திரப்பிள்ளை -
ஜெயசுகி
இடைக்குறிச்சி, வரணி,
யாழ்ப்பாணம்.
03.02.1976 - 26.03.2000
ஓயாத அலைகள் 03
தொடர் தாக்குதலின் போது
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி மேஜர் மலர்விழி**
பாலகிருஸ்ணன் சங்கீதா
வண்ணார்பண்ணை,
யாழ்ப்பாணம்.
24.10.1975 - 31.03.2000
ஓயாத அலைகள் 03
தொடர்தாக்குதல்
இயக்கச்சிப்
பகுதியில்
கரும்புலித்
தாக்குதலில்.





**கடற்கரும்புலி மேஜர்**
**உமேசன்/ செழியன்**
தங்கவேல் -
ஆனந்தகுமார்
சங்கரப்பிள்ளைவீதி,
நெளுக்குளம், வவுனியா.
10.03.1977 - 26.09.1999
முல்லைக் கடற்பரப்பில்
கடற்படைக்கப்பல்
மீதான கரும்புலித்
தாக்குதலின் போது.



**கடற்கரும்புலி**
**மேஜர் நாதவேணி**
நாகேந்திரம் அனுசா
பெற்றோல் நிரப்பு
நிலையம்,
மயிலிட்டி, யாழ்ப்பாணம்.
21.12.1978 - 26.09.1999
முல்லைக் கடற்பரப்பில்
கடற்படைக்கப்பல்
மீதான கரும்புலித்
தாக்குதலின் போது.



**கரும்புலி மேஜர் றீகஜீவன்**
சிவராசா கலைக்குமார்
3ம்குறுச்சி,
12ம் வட்டாரம்,
காரைதீவு,
மட்டக்களப்பு.
29.09.1978 - 20.05.2000
ஓயாத அலைகள் 03
நடவடிக்கையின் போது
கோப்பாய்
பகுதியில்.



**கரும்புலி மேஜர் குமழவன்**
சிவப்பிரகாசம் லுசாகரன்
பழுகாமம்,
பெரியபோரதீவு,
மட்டக்களப்பு.
12.09.1980 - 22.05.2000
ஓயாத
அலைகள் 03
நடவடிக்கையின்
போது புத்தூர்
பகுதியில்.









**கரும்புலி மேஜர்**
**ஆந்திரா/நாயகம்**
விநாயகமூர்த்தி முகுந்தினி
மருதங்கேணி தெற்கு,
தாளையடி, யாழ்ப்பாணம்.
03.03.1977 - 31.03.2000
ஓயாத அலைகள் 03
தொடர்தாக்குதல்
இயக்கச்சிப்
பகுதியில் கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி**
**மேஜர் சத்தியா/சசி**
கிருஸ்ணமூர்த்தி-
முகுந்தினி
பெற்றோல் நிரப்புநிலையம்,
நெல்லியடி, யாழ்ப்பாணம்.
06.12.1978 - 31.03.2000
ஓயாத அலைகள் 03
தொடர்தாக்குதல்
இயக்கச்சிப் பகுதியில்
கரும்புலித் தாக்குதலில்.



**கரும்புலி மேஜர்**
**அறிவுக்குமரன்**
குமாரவேல் கேதீசன்
முகத்தான்குளம்,
செட்டிக்குளம்,
வவுனியா.
15.02.1973 - 11.04.2000
திருமலைக் கடற்பரப்பில்
கடற்படையுடன்
ஏற்பட்ட
மோதலின் போது.



**கடற்கரும்புலி மேஜர்**
**ரவி/விடுதலை**
கந்தையா செல்வன்
நாவாந்துறை,
யாழ்ப்பாணம்.
21.04.1971 - 26.09.1999
முல்லைக் கடற்பரப்பில்
கடற்படைக்கப்பல்
மீதான
கரும்புலித்
தாக்குதலின்போது.



**கடற்கரும்புலி மேஜர்**
**நல்லப்பன்**
வேலுப்பிள்ளை ராசன்
சந்திரசேகரப்பிள்ளையார்
கோவிலடி, கல்வியங்காடு,
யாழ்ப்பாணம்.
06.05.1971 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில் கடற்படைக்
கப்பல் உகண மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கரும்புலி மேஜர்**
**மறைச்செல்வன்**
செல்வராசா
ரஜனிகாந்தன்
சாந்தபுரம்,
சாஸ்திரிகூழாங்குளம்,
வவுனியா.
03.05.1981 - 10.05.2000
ஓயாத அலைகள் 03
நடவடிக்கையின்போது
நாகர்கோயில் பகுதியில்.



**கரும்புலி**
**மேஜர் சதா**
மாணிக்கம் கனகாம்பிகை
தென்னியங்குளம்,
துணுக்காய்,
மல்லாவி.
14.05.1976 - 25.05.2000
ஓயாத அலைகள் 03
யாழ் மண்டைதீவு
பகுதியில்.



**கரும்புலி**
**லெப்.கேணல்**
**ஞானேஸ்வரன்/ஞானக்குமார்**
அழகப்போடி விநாயமூர்த்தி
40ம் கிராமம்,
திக்கோட்டை, மட்டு.
30.12.1976 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில் கடற்படைக்
கப்பல் உகண மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் சூரன்**
இராசதுரை ரவீந்திரன்
4ம் கட்டை, பூநகரி,
மன்னார்.
31.08.1974 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில்
கடற்படைக் கப்பல்
உகண மீதான
கரும்புலித்தாக்குதலில்.










**கடற்கரும்புலி மேஜர் சந்தனா**
குணசிங்கம் கவிதா
வீரமாணிக்க
தேவன்துறை,
மயிலிட்டி, யாழ்ப்பாணம்.
14.02.1973 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில் கடற்படைக்
கப்பல் உகண
மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் இளமதி**
கனகநாயகம்பிள்ளை -
ஜெயச்சித்திரா
வேலணை மேற்கு,
யாழ்ப்பாணம்.
18.09.1975 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில் கடற்படைக்
கப்பல் உகண மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் பாமினி**
பாரராசசிங்கம்
விஜயலட்சுமி
காரைநகர்,
யாழ்ப்பாணம்.
13.02.1975 - 26.06.2000
பருத்தித்துறைக்
கடற்பரப்பில் கடற்படைக்
கப்பல் உகண மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் றெஜி/இளங்கோ**
மாணிக்கம் ரமேஸ்
8ம் குறுச்சி,
அக்கரைப்பற்று,
அம்பாறை.
14.06.1973 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி மேற்கொண்ட
கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**றோஸ்மன்/கணேஸ்**
தேவராசா ரவீந்திரராசா
10ம் கட்டை,
கோபாலபுரம்,
நிலாவெளி, திருமலை.
01.04.1972 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி மேற்கொண்ட
கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**நித்தி/சோழவேங்கை**
இராசையா ஜெகன்
பூந்தோட்டம்,
வவுனியா.
25.06.1977 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி
மேற்கொண்ட
கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் மயூரன்**
கந்தசாமி பிரகாஸ்
மயிலணை வடக்கு,
சுன்னாகம்,
யாழ்ப்பாணம்.
07.07.1978 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி மேற்கொண்ட
கரும்புலித் தாக்குதலில்.





**கடற்கரும்புலி கப்டன்**
**ஜெயாஞ்சலி**
இராமையா இந்திராதேவி
ஆழியவளை,
தாளையடி,
யாழ்ப்பாணம்.
13.01.1979 - 03.07.2000
தமிழீழக் கடற்பரப்பில்
தாக்குதல் முயற்சியின்
போது.



**கரும்புலி**
**மேஜர் சிறிவாணி**
சின்னத்தம்பி சாந்தி
களுதாவளை, 03ம்
குறிச்சி, மட்டக்களப்பு.
23.11.1975 - 05.07.2000
முல்லை மாவட்டத்தில்
பயிற்சியின்போது ஏற்பட்ட
எதிர்பாராத
வெடிவிபத்தில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் திசையரசி**
செல்லச்சாமி செல்லம்
உடுத்துறை
வடக்கு,
தாளையடி, யாழ்ப்பாணம்.
17.03.1972 - 15.08.2000
தமிழீழக்
கடற்பரப்பில் நீச்சல்
பயிற்சியின்போது.



**கரும்புலி கப்டன்**
**தமிழ்க்குமரன்**
சின்னக்குட்டி-
சதீஸ்வரதராசா
ஊறணி, புத்தூர் கிழக்கு,
05.01.1978 - 10.09.2000
திருமலை புல்மோட்டை
13ம் கட்டையில் கைது
செய்ய முயன்றபோது
இராணுவம் மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் திருமாறன்**
ஜெயம் சிநாதரன்
ஆவரங்கால், புத்தூர்,
யாழ்ப்பாணம்.
25.03.1980 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி மேற்கொண்ட
கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் நிதர்சன்**
தியாகராசா தியாகேந்திரன்
கள்ளப்பாடு,
முல்லைத்தீவு.
09.08.1978 - 23.10.2000
திருமலையில் கடற்படை
துறைமுகத்தினுள்
ஊடுருவி மேற்கொண்ட
கரும்புலித்
தாக்குதலில்.



**கரும்புலி**
**மேஜர் வர்மன்**
வடிவேல் தங்கத்துரை
களுவாஞ்சிக்குடி,
மட்டக்களப்பு.
25.12.1977 - 24.10.2000
ஓயாத அலைகள் -04
நாகர்கோவில்
பகுதியில்



**கரும்புலி**
**மேஜர் சோபிதன்**
துரைச்சாமி ஜீவகணபதி
தச்சங்குளம்,
மூன்றுமுறிப்பு,
வவுனியா.
27.11.1973 - 24.10.2000
ஓயாத அலைகள் -04
நாகர்கோவில்
பகுதியில்



**கரும்புலி**
**கப்டன் சந்திரபாபு**
குமரப்போடி லிங்கராசா
கொக்கட்டிச் சோலை,
மட்டக்களப்பு.
01.01.1980 - 24.10.2000
ஓயாத அலைகள் -04
நாகர்கோவில்
பகுதியில்







**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் நரேஸ்**
முருகேசு பிரமகுமார்
தும்பளை தெற்கு,
பருத்தித்துறை,
யாழ்ப்பாணம்.
14.01.1974 - 03.11.2000
திருமலைத் துறைமுகத்தில்
கடற்படையின் டோறா
பீரங்கிப்படகு மீதான
கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**சுடர்மணி/செங்கதிர்**
சிவராசா சிறிதரன்
வண்ணாங்கேணி, பளை,
யாழ்ப்பாணம்.
21.06.1977 - 03.11.2000
திருமலைத்
துறைமுகத்தில்
கடற்படையின் டோறா
பீரங்கிப்படகு மீதான
கரும்புலித் தாக்குதலில்.



**கடற்கரும்புலி லெப். கேணல்**
**இரும்பொறை/சல்மான்**
சிவலிங்கம் சிவஜங்கரன்
நல்லூர், பூநகரி,
மன்னார்.
19.03.1971 - 01.11.2000
முல்லைக்
கடற்பரப்பில்
சிறிலங்காக்
கடற்படையுடனான
மோதலில்.





**கடற்கரும்புலி**
**கப்டன் விடுதலை**
கந்தையா இந்திராணி
ஆழியவளை,
தாளையடி,
யாழ்ப்பாணம்.
11.04.1975 - 21.02.2001
முல்லைக்கடற்பரப்பில்
ஏற்பட்ட எதிர்பாராத
விபத்தில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் ராகுலன்**
ஏரத்பண்டா
கிருஸ்ணகுமார்
கோரக்கன்கட்சி,
பரந்தன்,
கிளிநொச்சி.
28.03.1984 - 04.08.2001
முல்லைக்
கடற்பரப்பில் ஏற்பட்ட
விபத்தில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் கரிகாலன்**
பூலோகசிங்கம்-
புஸ்பகாந்தன்
முள்ளிவாய்க்கால்,
முள்ளியவளை.
01.09.1980 - 04.08.2001
முல்லைக்
கடற்பரப்பில் ஏற்பட்ட
விபத்தில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**குமாரவேல்/மதி**
கிருஸ்ணபிள்ளை சிவகுமார்
குருவீதி, காங்கேசன்
துறைச்சந்தி, யாழ்ப்பாணம்.
08.09.1972 - 01.09.2001
பருத்தித்துறைக் கடல்
பரப்பில் ரோந்துவந்த
சிறிலங்கா கடற்படையினரின்
நீரூந்துவிசைப் படகு
மீதுமேற்கொண்ட
ஊடுருவித்தாக்குதலில்.





கடற்கரும்புலி
மேஜர் சதாசிவம்
பிள்ளையான் -
திருச்செல்வம்
சந்திவெளி, மட்டக்களப்பு.
08.08.1978 - 02.11.2000
முல்லைக் கடற்பரப்பில்
சிறீலங்காக்
கடற்படையுடனான
மோதலில்.



கடற்கரும்புலி கப்டன்
கஸ்தூரி/பூங்கதிர்
நல்லநாதன் பவானி
பெரியமடு, நெடுங்கேணி,
வவுனியா.
30.03.1980 - 21.02.2001
முல்லைக்கடற்பரப்பில்
சிறீலங்கா
கடற்டையினருடன்
எதிர்பாராதவிதமாக ஏற்பட்ட
மோதலில்.



கடற்கரும்புலி மேஜர்
காந்தன்
மகாதேவன் சுதாகரன்
15ம்கட்டை,
கொக்குத்தொடுவாய்,
மணலாறு.
21.05.1976 - 29.03.2001
தமிழீழக்
கடற்பரப்பில் படகில்
ஏற்பட்ட
வெடி விபத்தில்.



கடற்கரும்புலி
கப்டன் வாகைசூடி
மரியநாயகம்-
திலிப்ஸ்ரீபன்
பெரியவிளான், இளவாலை,
யாழ்ப்பாணம்.
12.10.1976 - 29.03.2001
தமிழீழக் கடற்பரப்பில்
படகில் ஏற்பட்ட
வெடி விபத்தில்.



கடற்கரும்புலி மேஜர்
அருணா/சுதா
குலசிங்கம் தவச்செல்வி
மட்டுவில் வடக்கு,
கெற்பேலி, சாவகச்சேரி,
யாழ்ப்பாணம்.
03.06.1969 - 16.03.2001
பருத்தித்துறை கடற்
பரப்பில் கடற்படையி
னரின் கப்பல் தொடரணி
மீதான தாக்குதலில்.



கடற்கரும்புலி மேஜர்
ஓசை/இனியவன்
இரத்தினம் ராஜ்குமார்
முள்ளிவீதி, அரியாலை,
யாழ்ப்பாணம்.
07.05.1981 - 15.09.2001
திருமலை துறைமுக
வாசலில் ரோந்து நடவடிக்
கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த அதிவேக
டோறா பீரங்கிகலம்
மீதான தாக்குதல்.



கடற்கரும்புலி கப்டன்
தமிழினியன்/ பொறையரசன்
செல்வரத்தினம்
யோகேஸ்வரன்
குடத்தனை கிழக்கு,
யாழ்ப்பாணம்.
26.04.1982 - 15.09.2001
திருமலை துறைமுக
வாசலில் ரோந்து நடவடிக்
கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த அதிவேக
டோறா பீரங்கிகலம் மீதான
தாக்குதல்.



கடற்கரும்புலி லெப். கேணல்
அனோன்/ அருட்செல்வன்
சிதம்பரப்பிள்ளை -
சிவகுமார்
ஒதியமலை, நெடுங்கேணி,
வவுனியா.
28.12.1971 - 16.03.2001
பருத்தித்துறை கடற்பரப்பில்
கடற்படையினரின்
கப்பல் தொடரணி மீதான
தாக்குதலில்.



கடற்கரும்புலி
மேஜர் காந்தி
சோபதேயூ ஜெரின்
கடற்கரைவீதி,
விடத்தல்தீவு, மன்னார்.
26.09.1975 - 16.03.2001
பருத்தித்துறை
கடற்பரப்பில்
கடற்படையினரின்
கப்பல் தொடரணி
மீதான தாக்குதலில்.









**கடற்கரும்புலி**
**மேஜர் நித்தியா**
செல்வராசா தயாளினி
தம்பசிட்டி, புலோலி,
பருத்தித்துறை,
யாழ்ப்பாணம்.
13.07.1977 - 16.03.2001
பருத்தித்துறை கடற்
பரப்பில் சி. கடற்படையி
னரின் கப்பல் தொடரணி
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**சிவாகரன்/நல்லமுத்து**
கார்த்திகேசு -
செந்தில்குமார்
கொழும்புத்துறை,
யாழ்ப்பாணம்.
17.07.1975 - 23.09.2001
முல்லைக்கடற்பரப்பில்
சிறீலங்கா கடற்படையின
ரின் ரோந்து விசைப்படகு
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் புலிமகள்**
முத்துலிங்கம் யசோதா
குரவயல், உடையார்கட்டு,
தெற்கு உடையார்கட்டு.
13.04.1982 -23.09.2001
முல்லைக்கடற்பரப்பில்
சிறீலங்கா
கடற்படையினரின்
ரோந்துவிசைப்படகு
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் கஸ்தூரி**
தங்கராசா சுதாசினி
பொன்னாலை மேற்கு,
சுழிபுரம், யாழ்ப்பாணம்.
28.05.1981 - 30.10.2001
பருத்தித்துறை கடற்பரப்பில்
சிறீலங்கா கடற்படையின்
எரிபொருள் கப்பலான
துகிந்தா கப்பல் மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் கனியன்பன்**
மயில்வாகனம் சிறிகாந்
வத்திரான், உடுத்துறை,
வடகிழக்கு, யாழ்ப்பாணம்.
02.02.1981 - 30.10.2001
பருத்தித்துறை
கடற்பரப்பில் சிறீலங்கா
கடற்படையின்
எரிபொருள் கப்பலான
துகிந்தா கப்பல் மீதான
கரும்புலித்தாக்குதலில்.



**கடற்கரும்புலி கப்டன்**
**அன்புமலர்/கேசவி**
பொன்ராசா அன்பழகி
வசாவிளான்,
யாழ்ப்பாணம்.
21.07.1976 - 30.10.2001
பருத்தித்துறை கடற்பரப்பில்
சிறீலங்கா கடற்படையின்
எரிபொருள் கப்பலான
துகிந்தா கப்பல் மீதான
கரும்புலித்
தாக்குதலில்.



**கடற்கரும்புலி லெப்.**
**கேணல் கதிர்காமரூபன்**
கனகானந்தன் -
ஆனந்தகிருஸ்ணன்
புலோலி மேற்கு, பருத்தித்
துறை, யாழ்ப்பாணம்.
25.01.1975 - 02.11.2000
தமிழீழக் கடற்பரப்பில்
நடவடிக்கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த
கடற்படையினருடனான
மோதலில்.









**கடற்கரும்புலி**
**கப்டன் அன்புக்கினியன்**
நமசிவாயம் சிவரூபன்
புலோலி தெற்கு,
மந்திகை,
யாழ்ப்பாணம்.
25.09.1978 - 15.10.2001
திருமலை
பள்ளித்தோட்டம் பகுதியில்
இராணுவத்தினர் மீதான
தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் றோசா**
கணேசன் கற்புக்கரசி
வாரிவளவு, காரைநகர்,
யாழ்ப்பாணம்.
06.10.1980 - 21.10.2001
முல்லைக்
கடற்பரப்பில் ரோந்து
நடவடிக்கையில்
ஈடுபட்ட கடற்படையினர்
மீதான தாக்குதலில்.



**கடற்கரும்புலி**
**லெப்.கேணல் அமுதசுரபி**
சின்னப்பு நந்தினி
செம்பியன்பற்று தெற்கு,
யாழ்ப்பாணம்.
23.07.1972 - 26.10.2001
முல்லைக் கடற்பரப்பில்
ரோந்து நடவடிக்கையில்
ஈடுபட்ட சி. கடற்
படையினரின் அதிவேக
டோறா பீரங்கி கலங்
கள் மீதானதாக்குதலில்.



**கடற்கரும்புலி மேஜர்**
**கடலரசன்/சமுத்திரன்**
தம்பிப்பிள்ளை நவம்
8ம் வட்டாரம்,
இந்திராணஸ்ரோஸ்,
சித்தாண்டி, மட்டு.
15.08.1974 - 30.10.2001
பருத்தித்துறை கடற்பரப்பில்
சிறீலங்கா கடற்படையின்
எரிபொருள் கப்பலான
துகிந்தா கப்பல் மீதான
கரும்புலித்தாக்குதலில்



**கடற்கரும்புலி**
**கப்டன் இளங்குயிலன்**
நோயல் இம்மனுவேல்
பற்றிக்எட்பன்
முருங்கன்,
மன்னார்.
02.10.1979 - 21.10.2001
தமிழீழக் கடற்பரப்பில்
சிறீலங்கா
கடற்படையினருடனான
மோதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் இலக்கியன்**
சிவகாமி கரிகரன்
பசிலன்வீதி, 3ம் வட்டாரம்,
முள்ளியவளை, முல்லை
12.04.1980 - 02.11.2000
தமிழீழக் கடற்பரப்பில்
நடவடிக்கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த
கடற்படையினருடனான
மோதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் குமரவேல்**
சுப்பிரமணியம் சுதர்சன்
இல.16, குமாரசாமி வீதி,
கந்தர்மடம், யாழ்ப்பாணம்.
25.01.1978 - 02.11.2000
தமிழீழக் கடற்பரப்பில்
நடவடிக்கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த
கடற்படையினருடனான
மோதலில்.



**கடற்கரும்புலி**
**கப்டன் வல்லவன்**
நவநீதன் பத்மலதன்
தச்சன்தோப்பு, கைதடி,
யாழ்ப்பாணம்.
13.02.1980 - 02.11.2000
தமிழீழக் கடற்பரப்பில்
நடவடிக்கையில் ஈடுபட்டுக்
கொண்டிருந்த
கடற்படையினருடனான
மோதலில்.



**கடற்கரும்புலி**
**மேஜர் வளவன்**
முருகேசு உதயகுமார்
திருவள்ளுவர்,
சனசமூகநிலையம்,
மானிப்பாய் மேற்கு,
யாழ்ப்பாணம்.
20.02.1982 - 09.11.2001
யாழ் - நீரேரியில்
இராணுவத்தினருடனான
மோதலில்.







"

கரும்புலி வீரர்கள் பலர் இன்று பெயர் குறிப்பிடப்படாத கல்லறைகளில் அநாமதேயமாக உறங்கிய போதும், அவர்களது அற்புதமான சாதனைகள் வரலாற்றுக் காவியங்களாக என்றும் அழியாப்புகழ்பெற்று வாழும்

"

தமிழீழ தேசியத்தலைவர்



சே. இராணிமைந்தன்

# மௌனத்தின் புன்னகை

பேசவில்லை.
மௌனமாக புன்னகைத்தான்.
புன்னகையின் அர்த்தம் புரியவில்லை.
புரிந்து கொள்ள முடியாமல்,
அந்தரித்தது மனது.

அவகாசமற்ற
அந்தப் பொழுதிற் கூட,
அவனிடம்
ஏதோவொன்றை கேட்கத் துடித்தேன்.
வினாவிரிக்க எண்ணுகையில்,
அவன் மௌனப்புன்னகை,
என்னை மௌனமாக்கியது.

விடைபெற்றுச் சென்றான்.
விளக்கமறியாமல்,
போய்வரக் கையசைத்தேன்.

அவன் வரவில்லை,
எங்கோ கேட்ட வெடியதிர்வில்
அவனும் ஒருவனாய்
மௌனப் புன்னகைக்கு
விளக்கம் தந்தான்.

சொல்லிச் செல்லாத
சிந்தனைக்குள் சிக்காத
அந்த உயர் உணர்வை மௌனத்தின்
புன்னகைக்குள்
புதைத்துச் சென்றவன்,
இன்று என் இதயத்தில்,
என்றும் புன்னகையாய்.



# இயக்கத்தின் தாய்



அம்மா எமக்கு அறிமுகமான அந்தநாள் இப்போது நினைவில் இல்லை. அது பணிமனைக் கோவைகளை பரிசீலித்தே அறிய வேண்டியதான ஒன்றாக எம் நினைவுப்பதிவுகளில் இருந்து மறந்து போய்விட்டது.

ஏதோவொரு இலக்கத்தாலும் நினைவில் வைத்திருக்க வாகாகத்தெரிவு செய்யப்பட்ட வழமையல்லாத ஏதோவொரு பெயராலும், குறிப்பிடப்பட்டிருக்கக்கூடிய அம்மாவின் கோவையும் பணிமனையின் எல்லாக்கோவையையும் போல் ஒன்றாகத்தான் தூங்கும். ஆனால் அம்மா எல்லோரையும் போன்றவரல்ல.

என்றென்றும் மறக்கப்பட முடியாதவராக அந்த அம்மா எம் நினைவுப்பதிவுகளில்... கரீர் என்ற கறுப்பு நிறமும், மெலிவான மலர்ந்த முகமும் சளசள வென்ற ஓயாத கதையுமாய்... நகைச்சுவை உணர்வுமிக்க ஒரு புலனாய்வாளனால் தமிழகத்து சிரிப்பு நடிகைகளது பெயரில் ஒன்றை புனைபெயராக தெரிவு செய்ய வைக்கும் பண்புகள்தான் அம்மாவில் வெளிப் பார்வைக்குத் தெரியும்.

சில பெண்பிள்ளைகளுடன் இளையவனாய் ஒரேயொரு மகன் என்பது அந்த மகன் மீது அதீத அன்புக்கு காரணமாய் அமைவது இயல்புதான். அம்மாவுக்கும் அப்படித்தான், சில பெண்சகோதரிகளுடனான அந்த ஒரேயொரு மகன் மீது கொள்ளைப் பாசம்.



காலத்தின் தேவையாக அந்த ஒரேயொரு மகன் போராளியாக ஆனபோது, அம்மாவின் அந்த அதீத பாசத்திற்கு சோதனை வந்தது. அந்தச்சோதனை எல்லா அம்மாமாருக்கும் வருவது போன்ற பாசத்தின் தளத்தில் எழும் வேதனை மட்டுமல்ல.

அம்மா அந்தக்காலத்து பழசுதான். ஆனால் பழமையில் ஊறிய பிற்போக்கு வாதியல்ல. இளமைக்காலத்தில் இருந்தே சமூகத்தின் மீதான பார்வையை செலுத்தக்கூடியவர். எம்மினத்தின் அரசியல் பயணத்தின் அம்சங்களை காலத்தால் அறிந்தவர். மென்முறையில் எழுந்த அரசியல் கோரிக்கைகள் ஆக்கிரமிப்பு வன்முறைகளால் ஒடுக்கப்பட்டதை கண்ணால் கண்டறிந்து குமுறியவர். அரசியல் மென்முறைகள் ஆக்கிரமிப்பு வன்முறைகளால் ஒடுக்கப்பட்டதன் மறுவடிவமாக அரசியல் வன்முறை வடிவம் கொண்டதை ஆரம்ப காலத்தில் இருந்தே வியப்புடன் பார்த்தவர்.

காலம் தன்பாட்டில் ஓடி, அம்மா குடும்பமாகி, பிள்ளைகள் பெற்று வளர்த்து... ஒரு சராசரி பெண்ணாக, தாயாக ஆனார். இதுவரை அம்மாவால் அப்படியாக வாழவும் முடிந்தது. ஆனாலும், மனதில் ஆயுதப் போராட்ட நியாயக்கருத்துக்கள் ஆழப்பதிவாகி இருந்தன. அந்த நியாயத்தின் கடமைக்காய் தன் கடைசிப்பிள்ளை அம்மாவின் பாசத்தை கொள்ளை கொண்ட செல்லமகன் - ஆயுதம் ஏந்தப்புறப்பட்டதை அம்மா எப்படி எதிர்கொள்வது? பெற்ற பாசமா? இனத்தின் சோகமா? என்ற தர்ம சோதனையில் அம்மா குழம்பி மகனது ஆயுதப்போர் வடிவத்தெரிவை மனதால் ஏற்று சமநிலைக்கு வர காலம் பிடித்தது.

இப்போது மகன் போராளி. தெருவில் போகவர அம்மாவை எதிர்கொள்வான். மகன் இப்போது வளர்ந்து விட்டான். வளர்ந்தவனையே கூட குழந்தையாய் பார்க்கும் அம்மா மனம், இப்போது மகனைக் கண்டு வியந்தது தன்ர சின்னப்பிள்ளை இப்போது பெரிய ஆளாய், ஏதேதோ வேலையாய் அங்கிங்கு ஓடித்திரிவது அம்மாவுக்கு சொல்லமுடியாத பெருமைதான்.

இயக்கத்தில் இணைந்த காலத்தில் மகன் சின்னப்பெடியன். வயதுக்கே உரிய வேகமான செயற்பாடும் குழப்படியும் கொண்ட இளைய போராளி. அவன் செய்யும் குழப்படிகள், வாங்கும் தண்டனைகள் எதுவும் அம்மாவுக்குத் தெரிய நியாயமில்லைத்தான். அதேபோல் வடமராட்சி பொறுப்பாளர் தண்டனை கொடுத்து களைத்துப்போயோ அல்லது இவன்தான் தண்டனை செய்து களைத்துப்போயோ என்னவோ ஆள் நெல்லியடியில் இருந்து சாவகச்சேரிக்கு நடந்தே வந்து சேர்ந்தும் அம்மாவுக்கு தெரிய எந்தநியாயமும் இல்லைத்தான்.

இதற்கிடையில் மகன் சண்டைக்களத்தில் என்ற செய்தியை மட்டுமே கேள்விப்பட்டு கவலைப்பட்ட அம்மா. கடும் சண்டை என்ற செய்தியால் எல்லா அம்மாக்களையும் போல அம்மாவும் பதறிக்கொண்டிருந்த ஒரு பொழுதில் மகன் காயமடைந்த செய்தி, பதறிய மனத்துடன் அம்மா ஓடித்திரிந்தும், மகனின் நண்பர்கள் மூலம் அவன் நிலையறிந்து துடித்ததுமாக கழிந்தது நாட்கள். அம்மாவுக்கு மகனின் சுகநலன் அறியும் தொடர்புகளும் ஏற்பட்டுவிட்டன. "அதுவொரு சின்னக்காயம் இன்னும் கொஞ்ச நாள்ள

காம்புக்கு வந்திடுவான்" என்று பொறுப்பாளர் சொல்லும் பொய்யான கதையை மீறி "வயிற்றுக்காயம்" "பதினைந்து தையலுக்கு மேல் போட்டிருக்கு" "இன்னும் சாப்பிடத் தொடங்கேல்ல" என்று உண்மைகளை அறிந்துவிடும் அளவுக்கு அம்மாவுக்குத் தொடர்புகள் ஏற்பட்டு அதனை தொடர்ந்து மருத்துவமனைக்கு போய்வரவும் தொடங்கிவிட்டா.

மருத்துவமனை "கெதியாக என்னை துண்டு வெட்டி விடுங்கோ உடனே சண்டைக்குப் போகவேணும்" உறுதியின் வெளிப்பாடுகள்.

"என்ர இடத்தில ஆமியின்ர பொடியும் ஆயுதமும் இருக்கு, காவு குழு அனுப்புங்கோ"

"......,.....,....." எம்மையா? எதிரியையா? என சிந்திக்க வைக்கும் எழுத்தில் சொல்லமுடியாத வசவுகள். மருந்தின் மயக்கத்தில் தம் நிலை மறந்து உளறல்கள்.

"ஐயோ தங்கேலாமல் கிடக்கு பெத்தடினைப் போடுங்கோ...ஓ..."

"வேதனை தாங்கேலாமல் கிடக்கு இந்தக் காலை வெட்டுங்கோ" கேட்போரின் கண்களில் இரத்தம் கசிய வைக்கும் வேதனைக்குரல்கள்.

மருந்துகளின் நெடியை மீறிய புண்களின் மணம்.

மகனைப் பிரிந்திருந்த அம்மா தனது பாச உணர்வுக்கும் அடிமனத்து விடுதலை உணர்வுக்குமாக ஒரு வடிகாலை தேடிக்கொள்ள, காயமடைந்த போராளிகளை பராமரிப்பவர்களில் ஒருவராகிவிட்டார். இந்தக் காலம் அம்மாவுக்கு விடுதலைப் போரை முன்னை விட கூடுதலாகவே அறிமுகம் செய்து வைத்தது. காயமடைந்த போராளிகளுடனான பரிச்சயமும், பழக்கமும் அம்மாவுக்கு போராட்டத்தின் இன்னொரு பக்கத்தை அறிமுகம் செய்து வைக்க அவவுக்கே தெரியாமல் அம்மா கொஞ்சம் கொஞ்சமாய் மாறிப்போனார்.

வெளியில் இருந்து போராட்டச் செய்திகளை மட்டும் கேட்பதற்கும், வெற்றிகளை கேட்டு மகிழ்சி அடைவதற்கும் அப்பால் அந்தச் செய்திகளின் உருவாக்கத்தின் யதார்த்தம் அம்மாவை அதிகமாக சிந்திக்க வைத்தது.

விட்டுக் கொடுக்கப்பட முடியாததான இவ்விடுதலைப் போராட்டம் இத்தனை கடினமானதா? இவ்வளவு கண்ணீரை வரவழைப்பதா? இழப்புக்களை குறைத்தோ அல்லது குறைக்கவோ ஏதாவது செய்யமுடியாதா? அம்மா அரசியல், இராணுவ வித்தகத்துடன் சிந்தித்தாவோ? இல்லையோ? அம்மாவாகச் சிந்தித்தா. எல்லாப் போராளிகளையும் தன் பிள்ளையாய் பார்த்த அம்மாவாக சிந்தித்தா.

எம் தாயகத்தில் விளைவிக்கும் ஆக்கிரமிப்பு கொடுமையின் ஒரு சிறு பங்காவது எதிரியின் கோட்டைக்குள் திருப்பிக் கொடுக்கப்படுவது அம்மா திருப்தியுடன் பார்க்கும் செய்திதான். அதுவுமல்லாது எதிரியின் பெரும் நிலைகள் அவ்வப்போது ஆங்காங்கே அழிக்கப்படுவதும் அது எதிரிக்கு ஏற்படுத்தும் அதிர்ச்சியும் அம்மா அறிவார். அதில் எம் போராளிகள் இங்கு போல் பெரும் இழப்புக்களை சந்திப்பதில்லை என்பதும் அம்மாவுக்கு தெரியும்.

ஏற்கனவே எரிபற்று நிலையில் இருந்த அம்மாவின் மனம்தான் இந்த வழியை நாடிப்போனதோ அல்லது அம்மாவை அறிந்து சந்தித்த அந்த போராளிகள்தான் அம்மாவின் மனதில் தீயை மூட்டினரோ? என்னவோ? அம்மா இப்போது புலனாய்வுத்துறையின் ஆள், முகவராம். வெளிவேலைக்கான முகவராம்.

அம்மா இப்போது மாறி விட்டா. முன்பு குடும்பம், அயலவர் என்று எல்லா



இடமும் செய்தி சொல்லி மருத்துவமனை சென்று வருபவர். இப்போது சுருக்கமாக வேறெங்கோ தனியாகப் போய்வரத்தொடங்கிவிட்டா. மருத்துவமனை போய்வர நேரம் இருக்குதோ இல்லையோ அம்மா இப்ப அங்கை எல்லாம் போகக்கூடாதாம். மருத்துவமனை என்றில்லை. இயக்கம் இருக்கிற இடம் ஒன்றுக்கும் போய் வரவும் கூடாதாம். இயக்கத்திற்கு ஆதரவாக கதைக்கக்கூடாதாம்.

அம்மாவுக்கு தன்னையே நம்ப முடியாதபடி ஆச்சரியம் கலந்த பெருமை. சி. ஐ. ஏ. கே. ஜி. பி. மொசாட் என்று புலனாய்வு அமைப்புக்களை பட்டியலிடுவதுடன் எங்கட வேலைத்திட்டம் என்று ஏதோதோ விளக்கங்கள். அம்மாவுக்கு எதுவெது விளங்குகிறதோ? இல்லையோ? மனதுக்குள் குறுகுறுவென்று ஆர்வ முனைப்பு.

அம்மாவுக்குள் இப்போது வேறொரு உலகம் அறிமுகம் செய்யப்பட்டு விட்டது. அவர் இப்போது இன்னொரு ஆளாகவும் செயற்படக் கூடியவராக ஆகிவிட்டார்.

“தலைநகர் அதிர்ந்தது” “தற்கொலையாளி அடையாளம் காணப்பட்டார்” “புலிகளைத் தேடி வலைவிரிப்பு” “ சூத்திரதாரி தலைமறைவு” “அடையாளம் காணப்பட்டவரின் பெயர் போலியானதென பொலிசார் தெரிவிப்பு” உலகமே செய்திகளை வியப்புடன் நோக்கும். சூழ உள்ள சுற்றத்தினரும் கூட தங்களுக்கு எல்லாம் தெரியும் என்பது போல செய்திகளும் கற்பனைகளுமாக கதைகதையாய் பீற்றித்திரிவார். எல்லாவற்றையும் அமைதியாக அமத்தலாக பார்த்தபடி பட்டுக்கொள்ளாமல் இருப்பா அம்மா.

ஆக, அம்மாவுக்குள் இப்போ வேறொரு உலகம் அறிமுகம் செய்யப்பட்டுவிட்டது.

அவ்வப்போது வந்து அன்பு மகனை பார்த்துக்கொள்வது தவிர மற்றும்படி எ வளவோ மாறிப்போனா அம்மா.

இதற்கிடையில் அம்மாவுடன் மகனுக்கு சரியான கோபமாம். அம்மாவின் அக்கா பெரியம்மா- மூலமாக செய்தியனுப்பியிருந்தான். “இட இவர் பெரிய மனுசனாகி இப்ப இவருக்கு கோபமும் வருமே” என செல்லமாய் சொல்லிவிட்டிருந்தா அம்மா.

இவனது போராளி நண்பனொருவன் ஊர்ப்பக்கமாய் வந்தபோது “சின்னதாய் ஒரு மூஸ் அடித்து அம்மாவிடம் போய் இவனது சுகநலன் சொல்லியுள்ளான். அவனுக்கு சாப்பாடு கொடுக்காமல் அனுப்பிவிட்டாவாம் அம்மா. போய்வந்தவன் குறையாகபேசவோ

இல்லை பகிடியாகவோ சொன்னானோ அல்லது அவன் சொல்லாமல்விட இவன்தான் கதைவிட்டு அறிந்தானோ என்னவோ? ஆளுக்கு சரியான கோபம்.

அம்மா வழமையில் அப்படியில்லை. எல்லோரையும் “குறிப்பாக போராளிகளை” உபசரிப்பதில் அதுவும் சக்திக்கு மீறியே உபசரிப்பதில் முன்னிப்பவர்தான். அன்று அந்த ஏழைத்தாய்க்கு என்ன கஸ்ரமோ? வசதிக்குறைவோ?

வீம்புக்காக அம்மாவில் கோபம் போட்டாலும் அவ்வப்போது பெரியம்மாவின் வீடு வந்து “அம்மாவில் இப்போதும் கோபம்தான்” என்று செய்தி சொல்லிப் போவான்.

மகன் பெரியம்மா வீடு வந்து. அம்மாவில் கோபம் சொல்லி நிற்பதும், அம்மாவின் சமையல் வேலிகளுக்குள்ளால் பயணித்து பெரியம்மா வீடு வந்து மகனிடம் சேர்வதும் நல்லதொரு நாடகம். அம்மாவின் கை மணம் தெரிந்தும் தெரியாதது போல நல்ல சாப்பாடு என பெரியம்மாவை புகழ்ந்துவிட்டு போகும் பிள்ளையை வேலியால் பார்த்திருப்பா அம்மா. தான் பார்ப்பது தெரிந்தால் அவருக்கு இன்னும் எழுப்பமாய்ப் போய்விடும் என அம்மா, மறைவாய் நின்று சிரிப்பது தெரியாமல் அம்மாவை தேடுவான்.



அன்றைய சுகமும் இன்றைய சோகமுமாய் ஆகிப்போன சின்னச்சின்ன ஞாபகங்கள் இப்படி எத்தனை?

காலம் கொஞ்சம் ஓடிப் போக மகன் இப்போது முதிர்ந்தவனாகி விட்டான். அம்மா எதிர்பார்க்க முடியாதபடி ஏன் அவனே கூட எதிர்பார்க்காமல் பொறுப்புள்ளவனாகிப் போனான். இயக்கத்தின் ஆசிரியர் அணியொன்றின் உதவியாளன் என்பதும், அவ் ஆசிரியர் அணியுடனும் அவர்தம் பணியுடனும் அவனுக்கேற்பட்ட ஈடுபாடுமாக அவனைப் படிப்படியாக முதிர்ந்தவனாக ஆக்கிவிட்டதோ?

சண்டை அணியில் நிற்கும் போது நண்பர்கள் செய்தது போல அவனும் கரும்புலி விண்ணப்பக் கடிதம் எழுதிக் காத்திருந்தது பழையகதை. இப்போது மொழிபெயர்ப்புத் திரைப்பட உருவாக்கற்பொறுப்பை கைமாற்றிக் கொடுத்துவிட்டு, அவன் கரும்புலிக்கான அழைப்பை ஏற்றுக்கொண்டதே புதியநிலை.

அணிசேர்ப்பு, தொடர்வகுப்பு, கடும்பயிற்சி, எதிரியின் தலைநகர் அறிமுகமென தயார்ப்படுத்தல்களுடன், தனிமைப்படுத்தப்பட்ட முகாம் வாழ்வுமாக மகனும் இப்போ வேறொரு உலகிற்கு மாறிப்போனான்.

மகன் வழிதெருவில் எதிர்படாமல் போனதும், வழமை போலதேடிப்போன இடத்தில் சரியான பதில் இல்லாது போனதும் அம்மாவுக்கு என்னவோ போலானது. காணாத மகனை தெருவில் கண்டபோது அவனது புதிய கூட்டாளிகளும், வழமையல்லாத நடை, உடை, பாவனையும் அம்மாவுக்கு எதையெதையோ எண்ணவும் வைத்தது. அம்மாவும் இப்போதும் பழைய அப்பாவி அம்மா இல்லை.

மகன் இவ்வழியில் கரும்புலியாய் தெரிவு











செய்யப்பட்டுவிட அம்மா வெளிவேலைகளில் இருந்து நிறுத்தப்படுவது தவிர்க்க முடியாததாக ஆனது. "தேவை ஏற்படும் போது அவசரமாக அழைக்கப்படுவீர்கள்" என்ற விளக்கத்தை அம்மாவால் முற்றாக நம்பவோ, புறக்கணிக்கவோ முடியவில்லை. தனக்கு கூறப்படுவது போலிக்காரணம் என்று தெரிந்தாலும் அதற்கு மேல் அம்மாவாலும் ஒன்றும் செய்யமுடியாமல் போக அம்மா, வழமையான அம்மாவாக வாழத்தொடங்கிவிட்டா.

அம்மாவின் சந்தேகத்தை இன்னும் அதிகரிக்க அல்லது தீர்த்து வைக்க காரணமாக இன்னொரு செய்தியும் வந்து சேர்ந்தது. அம்மாவின் உறவுக்கார பெண்மணியொருவர் கொழும்பில் இருந்து வந்திருந்தார். மகனை கொழும்பில் கண்டதை அம்மாவுக்குச் சொன்னது மட்டுமன்றி, தன்னைக் கண்டதை அம்மாவுக்குச் சொல்ல வேண்டாமென்று அவன் சொன்னதையும் வலு கவனமாய் மறக்காமல் சொல்லிவிட்டுப் போனார்.

அம்மாவின் மனப்புதிர் மெல்ல மெல்ல விடுபட்டுப்போகும் காலத்தின் ஒரு நாளில், "சொல்லாமல் கொள்ளாமல் திடுதிப்பென்று" வீடு வந்தான் மகன். பழைய கோபத்தை நினைவூட்டுவதும் செல்லம் கொஞ்சுவதுமாய், அதே பழைய மகனாய்.... ஒரே கொண்டாட்டம். வீடு நிறைந்து போனது. அப்பாவி அப்பாவுக்கும் அக்காளுக்கும், உறவுகளுக்கும் மகனது வீடு வருகையின் காரணம் தெரியாமல் ஒரே கொண்டாட்டம். அம்மாவுக்கு மட்டும் என்ன தெரியும்? ஒன்றுமே தெரியாதுதானே. "மகனது புதிய நடை, உடை, பாவனையில் வித்தியாசம் விளங்காது" "அவன் கொழும்புக்கு போனதும் தெரியாது" "அவனது அன்றி வந்து ஒன்றுமே சொல்லவும் இல்லை" ஒரே மகிழ்ச்சி வீடு நிறைந்த மகிழ்ச்சி....."

பிள்ளை "அம்மாவை தனக்கு சாப்பாடு ஊட்டி விடக் கேட்டது" "அம்மாவுக்கு நான்தான் தீத்துவேன்" என்று கூறி உணவூட்டிவிட்டதும் ஏன் என்று வீட்டில் மற்றயோருக்குத் தெரியாது. "தம்பி இப்பதான் செல்லம் கொஞ்சுது" என்று அவர்கள் பரிகசித்து பேசும் போதும் அம்மா கண்ணீர் மறைத்து, முகம் சிரித்து, "உணர்வு மறைத்து உணவூட்டி...." வீட்டில் ஒரே சிரிப்பும், கொண்டாட்டமும்தான். அம்மாவுக்குத்தான் ஒன்றும் தெரியாதே. மகன் முகாம் திரும்ப முன்புபோல் அவசரப்படவும் இல்லை. எல்லோரிடமும் விளையாட்டும், கதைகளுமாய் கொண்டாடி, உணவுண்டு, பாய்போட்டு நித்திரை கொண்டு அவன் முகாம் திரும்பும் வேளையில் அன்றைய பொழுது இரவைத் தொட்டுவிட்டிருந்தது.

அன்று அவன் சொல்லிவிட்டுப் போனது போல தனியாக வரவில்லை. அரை டசினுக்கு அதிகமான அவனது

நண்பர்களால் வீடு மீண்டும் களைகட்டியது. அவனது அம்மா, அப்பா, அக்காக்கள், வந்திருந்த அனைவருக்கும் அம்மா, அப்பா, அக்கா ஆயினர். அத்தனை பிள்ளைகளும் மாறி மாறியும் ஒன்றாயும் அம்மா.... என்று உறவு சொல்லி அழைக்க, வீடு களைகட்டியது.

ஒன்றுமே தெரியாத அப்பாவி அப்பாவும் அக்காக்களும் அவனது புதிய நண்பர்களின் உற்சாகத்தில் கரைந்து போயினர். அம்மாவும்தான். அவவுக்கும் தான் ஒன்றுமே தெரியாதே. அவவும் சேர்ந்து அந்த உற்சாகத்தில்...., வந்திருந்த எல்லோருக்கும் தடல்புடலாய் சமையல், சாப்பாடு என்று வீடு அமர்க்களப்பட்டபோதும், குசினியும் முற்றமுமாய் பம்பரமாய் சுழன்றபோதும் அப்பாவி அப்பாக்கும் அக்காக்களுக்கும் ஒன்றுமே தெரியாது. அம்மாவுக்கும்தான் ஒன்றுமே தெரியாதே.... அம்மாவுடன் வீடே வாசல் வரை வழியனுப்ப அவர்கள் புறப்பட்டு போயினர்.

அவர்கள் விடைபெற்று போயினர். அந்தத்தாயின் வழியனுப்பலின் பின்னர் அவர்கள் தாயகத்திடமும் விடை பெற்றுப் போய்.... போய் விட்டனர்.

நல்ல சூரியனின் பெயரால் கொடியோரின் ஆக்கிரமிப்புக் கதிர்கள் வலிகாமத்து மண்ணை சுட்டெரித்த காலத்தின் ஒரு பொழுதில் அவர்கள் எதிரியின் கோட்டைக்குள் புதுவரலாறு படைத்தனர்.

வீரமும் அர்ப்பணிப்பும் மட்டுமன்றி மனிதாபிமான நிதானமும் நிறைந்த அவர்களது வெற்றிச் செய்தியால் உலகமே உறைந்து நின்ற வேளையில், தமிழீழத்து எல்லோரையும் போலவே அவனது குடும்பத்திலும் மகிழ்ச்சி வெளிப்பாடுகள். ஆனால் அம்மா மனதில்....

மகனது பொறுப்பாளர்களை அம்மா சந்திக்கும் அந்த நாள் வந்தேவிட்டது. மகன் எங்கே? என்பதற்கான வழமையான பதில்கள் அம்மாவிடம் எடுபடாமல் போக, சந்திக்க வேண்டியது தவிர்க்க முடியாததாக ஆகிப்போனது.

"மனுசியின்ர வாயை முதலே அடைச்சுப்போட வேணும். கதைக்க விட்டால் தப்பேலாது" என்ற சிந்தனையில் மகன் நிற்குமிடம் அவனைச்சந்திப்பதில் உள்ள வசதிக் குறைவு... என பொருத்தமற்ற பொய்யான பதில்களுடன் பொறுப்பாளர்.

"மகன் தூரத்தில...., மட்டக்களப்பில... நிற்கிறான்... வர கொஞ்சம் காலம் செல்லும்" அம்மாவின் முன்னால் இரத்தம் நீராகிப்போன பொறுப்பாளரின் வார்த்தைகள்.

அவரது உயிரற்ற வார்த்தைகளை மீறி அம்மாவின் உறுதியான கேள்வி.

"எப்படி என்ர மகன் கடைசி வரைக்கும் சரியாக செயற்பட்டவனே....?"

"எனக்கு எல்லாம் தெரியும். நான் பெத்து வளத்த பெடியன் அவன் சொல்கிறது பொய் எண்டு எனக்குத் தெரியாதே"

"உப்பிடி எத்தனை பொய்களை எனக்கு நீங்கள் சொல்லித்தந்திருப்பியள்"

"வீட்ட வந்து அவன் நித்திரை கொள்ளேக்க அவன்ர பொக்கற்றுக்குள்ள பார்த்தன். வட்டுக்கோட்டை அடையாள அட்டை வச்சிருந்தவன்" என்ர பிள்ளை அம்மாவுக்கு சொல்லேலாதெண்டு எனக்குத் தெரியும். அதில நான் ஏதும் பிழை விட்டிடக்கூடாது என்று தான் நானும் அவனோடை ஒன்றும் கதைக்கேல்லை.

"செய்தியை கேட்டுப்போட்டு அக்கா வீட்டை ஓடிப்போய் ரூபவாகினிதான் பார்தனான்" "முகம் தெரியாததால ஒருதருக்கும் விளங்கேல்லை - பெத்ததாய் எனக்கு தெரியாமல் போகுமே..."

"றெயில் தண்டவாளத்துக்குப் பக்கத்துல கிடக்கிறான் என்ரபிள்ளை..."

அடக்கி வைத்ததெல்லாம் வெடித்ததால் குமுறி அழும் அம்மாவிடம் சொல்ல வார்த்தைகள் இல்லை.

உலகத்தில் உள்ள பொய்கள் எல்லாம் எங்கோ ஓடிப்போக விக்கித்து நின்றவரிடம் அம்மா அந்த கடிதத்தைக் கொடுத்தா.

தன் வீரச்சாவு வெளிப்படும் வேளையில் அம்மாவுக்கு கொடுக்கவென மகன் எழுதிய கடிதம்.

எங்கோ பிசகுப்பட்டு முன்கூட்டியே அம்மாவின் கையில்.

எண்ணற்ற தடவைகள் படிந்துறைந்து போன அந்தக்கடிதத்தில் அவன் எல்லாம் எழுதியிருந்தான்.

முத்தாய்ப்பான வரிகள்.

"உன் கடன் தீர்க்காமல் போகின்றேனம்மா தமிழீழத்தில் அடுத்த பிறப்பில் உன்வயிற்றில் பிள்ளையாகவே என்னைப் பெற்றிடு அம்மா".

இப்பிறப்பில் தீர்க்காத உன் கடன் எல்லாம் அப்பிறப்பில் தீர்த்திடுவேன் அம்மா"

அம்மா தாயே உங்களை ஏமாற்ற உங்களின் பிள்ளைகள் நாங்கள் எத்தனை திட்டங்கள் போட்டோமம்மா. அத்தனை பற்றியும் அன்றே தெரிந்திருந்தும்... ஒன்றுமே கூறாது நீ நின்றதும் வென்றதும் எவ்வண்ணம் தாயே....

தாயகத்தின் தாயே உங்களிடம் நாங்கள் தோற்றுத்தான் போனோமம்மா.

**ச.பொட்டு**



# நீங்காத நினைவு..

கேணல் கிட்டு











கேணல் கிட்டு உட்பட
பத்து வேங்கைகளின்
நினைவாக...

பொங்குமாகடலில் ஓயாது
எழுகின்ற அலைகள் போல்...
நெஞ்சமெல்லாம் நினைவுகளின் ஓசை
வங்கக்கடல் பிளந்து...
எங்கள், சூரியரைப் புதைத்த கொடுமையின்
ஆறாத ரணத்தை வருடி... வருடி
ஆற்றவைக்க முடியவில்லை.
நெஞ்சத்தை பிழிகின்ற நினைவுளுக்கூடே
இறுதியாய் அவர் உரைத்த
விடுதலையின் மந்திரம்..

நினைவு நாள்:
ஜனவரி 16






# திலீபம்



நான் என் உயிரிலும்
மேலாக நேசிக்கும் மக்களே!
உங்களிடம் ஒரு பெரும்
பொறுப்பை விட்டுச்செல்கிறேன்,
நீங்கள் அனைவரும்
பரிபூரணமாகக்
கிளர்ந்தெளவேண்டும்,
இங்கு ஒரு மாபெரும்
மக்கள் புரட்சி வெடிக்கட்டும்

# திலீபனின் பசி

காசி ஆனந்தன்
(1987)

நினைவு நாள்:
செப்ரெம்பர் 26

செந்தமிழ் ஈழத்தின் விடுதலை தாருங்கள்!
திலீபனின் பசி அடங்கும்!
எந்தநாளும் எம்மை ஏமாற்றாதீர்— மீண்டும்
இரத்தத்தின் கதை தொடங்கும்!

தித்திக்கும் எங்கள் தாய்மண்ணிலே தினம் தினம்
சிங்களவர் குடியேற்றமா ?
எத்தனை புலிகளின் உயிரை எடுத்தீர்கள்
இன்னமும் வெறியாட்டமா ?

தழும்புகள் சுமந்தநம் புலிகள் பிறர்காலைத்
தாங்கவோ போர் தொடுத்தார் ?
கொழும்புதான் தமிழ்மண்ணை ஆளுமாம் அட எங்கள்
குழந்தைகள் இதற்கோ செத்தார் ?
கொடுதலை எனும்நிலை வந்தாலும் புலிகள் தம்
கொள்கையை விடுவாரோடா ?
எடு இதை எனச் சொன்னால் புலிகள் பிறர்வீசும்
எலும்பைப் போய்த் தொடுவாரோடா ?

செந்தமிழ் ஈழத்தின் விடுதலை தாருங்கள்!
திலீபனின் பசி அடங்கும்!
எந்நாளும் எம்மை ஏமாற்றாதீர்— மீண்டும்
இரத்தத்தின் கதை தொடங்கும்!







# நெஞ்சில் சுடரும் நினைவுகள்

நாற் சுவரே உலகமென
நம்பி நின்ற பெண்களைப்
பார் உலகை எனப்
பார்ப்பிக்கச் செய்தவளே.

பாரம் சுமக்கவல்ல
படைத்தது; பெண்களை
வீரத்தரசிகளாய்
வீதியுலா வருவதற்கேயென
உரக்கச் சொன்னவளே.
மாலதி,
நீயே வரலாற்றின் முதல்வரி.

'ஈழம்' தவிர்ந்தெந்த
இன்பமும் யாம்
வேண்டாமென
களத்தில் வீழ்கையில்
கடைசியாய் நீ சொன்னாய்.
பூட்டுடைத்து விடுதலைக்காய்
புறப்பட்ட மகளே—நீ
காட்டிச் சென்ற தெவ்வழி.
கடைசி வரை நாமும் அவ்வழி!

நினைவு நாள்: ஒக்ரோபர் 10

● முதற்பெண் மாவீரர்



# 2ம் லெப். மாலதி

நினைவாக...



# என்னை மறந்து விடுங்களேன்

அரசண்ணா

இனிமேலும் பொறுப்பது சரிப்பட்டுவராது! ஆத்திரமும் அவமானமும் என்னைப் போட்டுச் சப்பினதை இனிமேல் என்ன செய்வது?

எனது எண்ணங்கள் நம்பிக்கைகள் எல்லாம் நாசமாகிப் போய்விட்டன. புரண்டு புரண்டு படுக்கிறேன்.... நேரமும் இரவு பன்னிரண்டு மணிக்கு மேலாகியும் நித்திரை வரேல்லை. எட்டி உள்ளே பாத்தேன். மனுசியும் பிள்ளைகளும் நல்ல நித்திரை..... எனக்குமட்டும் நித்திரை வரேல்லை.... வீட்டுக்கு முன்னாலுள்ள வாய்க்காலில் தண்ணி சலசல எனும் சத்தத்துடன் ஓடிக் கொண்டிருந்தது....

போன விசயம் என்னப்பா? என்று கேட்ட, என்மனுசியிடம் எல்லாம் விடியச் சொல்கிறேன் எண்டு சொல்லிற்றன், அவள் சாப்பாடுதரவும் நான் வழியில் வரும்போது சாப்பிட்டிட்டன், என்று பொய்யும் சொல்லிப் போட்டன். சை! இந்தப் பொய்யினாலே யாருக்கும் நட்டமோ துன்பமோ இல்லைத்தானே!

தண்ணி சலசல சத்தத்துடன் ஓடிக்கொண்டிருப்பது தொடர்ந்து கேட்டது. தண்ணிக்கும் நித்திரையில்லையோ? ஓடிக்கொண்டிருக்கும் போது எப்படி நித்திரை வரும்? அது வாய்க்காலில் ஓடுது எனக்குள் எண்ணம் ஓடுது.... தண்ணி இருகரைக்கும் கட்டுப்பட்டு ஓடும். எனக்குள் எண்ணமோ கண்டபடி ஓடுது! எண்ண ஓட்டத்தை ஒழுங்குபடுத்தினால்தான் ஒரு முடிவைக்காணலாம்! இருந்த இடம் விட்டு இடம் பெயர்ந்து வன்னிக்கு வந்து ஏழுவருடம் தாண்டிவிட்டது.

வன்னியில் வாழ்க்கையோ தொடர்ந்த இடப் பெயர்வுகளாய் இருந்தது..... வருடத்துக்கு வருடம் ஏன், மாதத்துக்கு மாதம் என்றும் சொல்லலாம்.

ஆமி வந்திடுவானோ எண்ட அச்சத்தால் ஓடிய இடங்களே அதிகம்... அந்த அச்சம் ஒண்டும் பிழையானதல்ல.... இடம்பெயர்ந்து இடம் பெயர்ந்து... தவித்த.... தவிப்புக்களும், துடித்த துடிப்புகளும்.

வாழப்பிறந்த மனித வாழ்வு நீரோட்டத்தில் இத்தனை சுழல்களா? நீந்தி நீந்தி உடலும் களைத்துவிட்டது. கைகாலுகளும் சோர்ந்து விட்டன. தடுமாறுகின்றன. மிதந்திருப்பது நீரில், கால்கள்

அடிக்காமல் இருக்கமுடியுமா?

கைகால்களை அடித்து இதமாய் இயங்கினால் தானே மிதக்க முடியும். நீந்த முடியும்! அதுவும் சுழிகளுக்குள்ளும் அகப்படாமல் இருக்க வேண்டுமா!

ஏழுவருடங்கள் ஓயாத ஓட்டம்!

உண்ணல், உடுத்தல், உறங்கல், எதுவும் ஒழுங்கானபடி அமைக்க முடியாத நிலை. இந்த மூன்றிற்குமே முயன்று உழண்ட உழழ்வு....! சும்மாவிடு! இதற்கு பேர் வாழ்க்கை...! வாழ்வதே வாழ்க்கையெண்டு உண்ணாணை வாய் விட்டுச் சொல்லாதையுங்கோ! உயிரோடு உழண்டிடும் இந்த சீவியத்திற்கு உழழ்வு என்று ஏன் பேர் வைக்கக் கூடாது? ம்.... இப்ப ஓட்டை வாழ்வுக்கு ஒருமுடிவு வந்துதான்கிடக்கு! என்ரை ஓட்டை வாழ்வுக்கு ஒரு முடிவு வரேல்லையே! பல்லி ஒன்று சத்தம் போட்டது! மேலே பாத்தேன் ஒன்றும் தெரியேல்லை. என்ரை வீட்டுக் கூரைமுகட்டில் ஓட்டைதான் தெரிந்தது. "குடுக்கிற கடவுள் கூரையைப் பிய்ச்சுப் போட்டுக் குடுப்பார் எண்டு சொல்லுவார்கள்! ஒழுங்கான கூரை இருந்தால் தானே அவரும் பிச்சுப்போட்டுத் தர முடியும்!

மீண்டும் புரண்டு சரிந்து படுக்கிறன். நித்திரைவந்தாத்தானே... இனிமேலும் பொறுப்பது ஒத்து வராது எண்டுதானே யோசிக்க வெளிக்கிட்டனான். இப்ப என்னவெல்லலாமோ யோசிக்கிறன்.

தவளைகளோ வேறுஎதுகளோ சத்தம் போட்டது! அவையள் என்னைப்பார்த்துப் பழிக்குதுகளோ? எனக்குக் கிட்டடியாக அவற்றின் சத்தம் தொடர்ந்து கேட்டது. இனியும் பொறுக்கேலாது.

படுத்தபடியே கைகளை நீட்டித் தடவினேன். ஏதோ ஒரு பொருள் தட்டுப்பட்டது. வாசலுக்குள்ளால் சத்தம் வந்த இடத்திற்கு எறிந்தேன்... டிடங்? கென்று எறிந்த பொருள் வீழ்ந்து உருண்டது.

ம்... இதற்கான திட்டும் பேச்சும் நாளைக்கு நடக்கும். உள்ள பார்த்தேன்.... அவள்பாவி நிம்மதியான நித்திரை...! தவளை சில்வண்டுகளின் சத்தமும் நிண்டு விட்டது. நிம்மதியாக மீண்டும் எண்ணத் தொடங்கினேன்.

இடம் பெயர்ந்து வந்திருந்த வன்னியில் ஒரு இருப்பிடம் நல்லதாய் சொந்தமாய் உருவாக்க முடியவில்லை. வசதியாய் இடமும் கிடைக்கவில்லைத்தான், எப்படிக் கிடைக்க முடியும்?

சண்டைக்காலத்தில் படையள் வந்ததாலையும் துரத்தினதாலையும் இடம்பெயர்ந்தம்.... இப்ப இருக்கிற காணியின் சொந்தக்காரர் வந்து....! இயக்கப்புள்ளையள், புள்ளையள் எண்டால் ஆம்பிளை பொம்புளைப் போராளிகளைச் சேர்த்துத்தான் சொல்லுறன். நான் எப்பவும் அப்படித்தான் சொல்லுறனான். அதுகள் தந்த காணிதான் இது! காணிச் சொந்தக்காரர் காணியைவிடச் சொல்கிறார் புள்ளைகளை கேட்டா வேற காணி எப்பயோ தரக்கூடும், பிறகு, அந்தக் காணியின் சொந்தக்காரர் வரமாட்டாரே!

ம்... ஏன் தெல்லையே? சொந்த ஊருக்குப் போவம்! அங்கை கொஞ்சம் காணிகிடக்குத்தானே! தம்பியும் இருக்கிறான் மகனும் வெளியிலை ஏதாவது வீடு போடக்கீட உதவி செய்வான்தானே.

அமைதி வந்தும் ஒருவருடம் வன்னியை விட்டுப் போறேல்லை எண்ட முடிவோடு இவ்வளவு நாளும் போகாமல் இருந்திட்டன்.

சொந்த ஊர், நான் போன நேரம் தம்பி வெளியிலை, அட காணி எங்கயடா? வீடு எங்கயடா? யார் பதில் சொல்கிறது?... நான்தான் பதில் சொல்ல வேணும்!



வன்னியில் மரங்களின் காடு. நம்மூரில் இடிபட்டு வீழ்ந்த கற்குவியலின் காடு. அது முற்காலம் தந்த புண்ணியம். இது இக்கால புண்ணியம். வன்னியின் புழுதிகளை விட என்ர சொந்த இடத்தில் உள்ள கொம்மாண்ட முள்ளுக்கம்பியள் உறுத்துது கண்ணுக்கை. அந்த அடிபட்ட கற்குவியலுக்குள்ளாலையும் யாரோ ஒருவர் சுத்துமதில் கட்டிப் போட்டார். மதில் கட்டின காணிக்கை நிண்டது வேம்பு ஒன்று. அது மட்டும்தான் நிக்குது!....

காற்று அதனுடன் சம்பாசிக்குது... வேம்பும் ஏதேதோ தலைகாட்டி தலையாட்டிச் சொல்லுது. வேம்பு எனக்கும் ஏதோ சொல்லுது. அட என்ர காணிக்குள்ள நிண்ட வேம்பெல்லாம் இது ..... அதையும் சேர்த்து ஆரோ மதில் கட்டிப்போட்டான்.

நான் உள்ளே போட்டன். ஐயா வைச்சு வளத்த வேம்பு பாசத்தோடு அதைத் தொட்டன்.....

யாரது காணிக்குள்ளை? நிலக் கண்ணிவெடி வெடிச்சமாதிரி இருந்தது! உள்ளம் பதற வெடிச்சவனை பார்த்தேன். கண்ணிவெடி வெடிச்சா கால்லுடையும், இவன்ர வெடிப்பிலை என்ர மனம் உடைஞ்சு போச்சு, வெடிச்சவன் வேறுயாருமில்லை. என்ரை தம்பிதான். வெடிச்சவன் வெடிச்சதோட நிண்டானா? என்னத்துக்குள்ள போறாய் எண்டும் கேட்டான். தம்பி இது என்ர வேம்படா, மதில அதையும் சேர்த்துக் கட்டிக்கிடக்கு யார் இது கட்டினது? நான் தான் கட்டினனான். ஐயா காணி முழுக்க எனக்கு எழுதிப்போட்டார். ஆயிரம் ஆட்டுலெறிக்குண்டுகள் ஒண்டாவந்து வீழ்ந்து வெடித்தன. அதிர்ந்து போனன்.... ஐயா அப்படிச் செய்திருக்கமாட்டார் இவன் பொய்சொல்கிறான். அவன் ஏதேதோ கதைச்சான். அபகரிக்க நினைக்கிறான் அதனாலை இவன் ஆயிரம்கதை கதைக்கிறான்.... சரி என்ரை சொந்த தம்பி தானே.... கொஞ்சம் இரந்தும் உறவாடியும் கதைப்பம் இப்ப என்ன கெட்டது?....

அட தம்பி! ஐயா எனக்குத் தந்து நான் குடியிருந்த காணி இதுதாண்டா தம்பி, நீ மதில்நேருக்காக இந்தக் காணியையும் அரைவாசியைச் சேர்த்து மதில் கட்டிப் போட்டாய், அட தம்பி நான் எங்கை வந்து வீடு போடுறது?

கொஞ்சம் கூடக்குறைய இரந்துதான் கேட்டனான்! காற்றின் உதைப்பிற்கும் இழப்பிற்கும் ஏற்றவாறு சோவென்று



சத்தமிட்டவாறு ஆடி அசைந்து கொண்டிருந்த வேம்பு அப்படியே திடீரென்று அசையாமல் ஆடாமல் நிண்டது!

வேம்பு எனக்கு இரக்கம் தெரிவிக்குதோ? தம்பி கதைக்கிறான்! என்ரை மோன் வாற மாதம் காசு அனுப்புறான் நான் ஒரு கடையும் அரிசி குத்துற மில்லும் கட்டப் போறன்.

ம்.... அவன்ரை மகன் வெளிநாட்டிலை நிண்டு காசு அனுப்பப் போறான்... ஒருக்கா இரந்து போட்டன் இன்னுமொருக்கால் இரந்து பார்ப்பம். அட தம்பி ஐயாட்டை நான் காசு கொடுத்துக் கொள்முதல் செய்த இரண்டு பரப்புக் காணியும் இதுக்கைதாண்டா கிடக்கு. ஆடாமல் அசையாமல் நிண்ட வேம்பு மீண்டும் சோவென்று அசையத் தொடங்கியிட்டது. நான் மீண்டும் இரப்பது இதுக்குப்பிடிக்கேல்லையோ? எப்ப வேண்டினனி எங்களுக்குத் தெரியாமல்? தம்பியின் கேள்விக்கு நான் பதிலும் இரந்துதான் சொன்னன். அட தம்பி, மச்சாளின்ரை சீதணக் காசிலையெல்ல ஐயாவிட்ட இரண்டுபரப்பு வாங்கினனான்.

காற்றுக்கும் பொல்லாத சேட்டை, பொல பொலவென்று வேம்பின் சிறு கொம்பு ஒன்று ஒடிந்து வீழ்ந்தது.... ஒடிந்த கொப்புக்காகத்தான் வேம்பு கவலைப்பட்டதோ படேல்லையோ யாருக்குத்தெரியும். அது தொடர்ந்தும் காற்றுக்கு இயல்பாய் அசைந்து ஆடிக்கொண்டுதான் இருந்தது. காற்று இன்னும் எத்தனை கொப்பை ஒடிக்குமோ? இல்லை வேம்பைத்தான் முறிக்குமோ? என்க்காக இரக்கப்பட்ட வேம்புக்காக இப்ப நான் இரங்கினேன்....! அந்த வேம்பின் மீது நான் இரக்கம்காட்டத்தானே வேணும் அது ஒண்டுதானை என்ரை காணியைக் காட்டித்தரநிக்குது.....

வேகமாக அடிக்கும் காற்று என்ரை தடயத்தை முறித்துப் போடுமோ? அப்படியெண்டால் காற்றும் அநியாயத்தின் பக்கமோ?

உதிலை நிண்டு ஒண்டும் மசியவேண்டாம், காசு குடுத்துக் காணி வேண்டினால் உறுதியைக் கொண்டு வாவன் பாப்பம்! தம்பி எதுக்கும் தயாராய் நிண்டான்! ஏழு வருடமா எங்க போனனீங்கள்? ஐயா செத்ததுக்கும் வரேல்லை இப்ப வந்து நிக்கிறியள்!

அட என்ர தம்பிதான் பேசுகிறானா? ஏழெட்டு வருட வாழ்க்கை இவனை இப்படி ஆக்கிப் போட்டுதா? ஆமியோடை இருந்த குணமா இல்லை வெளிநாட்டுக் காசு கொடுத்த வீம்பிலை அன்பு பாசம் கெட்டுப் போச்சோ? ஒண்டுமாத் தெரியேல்லை.... என்ரை ஐயா தந்த காணியையும் எடுத்துப் போட்டான். நான் காசு குடுத்து வாங்கின காணியையும் விடமாட்டன் என்கிறான். இது அநியாயமல்லோ....? அநியாயம் எண்டு கேட்டா அடிப்பான் போல கிடக்கு! வன்னியில் வாழ்ந்த உழல்வால் மெலிந்த உடம்புடன் நான், வெளிநாட்டுப்பணத்திலை திண்டு கொழுத்த தினவிலை என்ரை தம்பி! சீ! இப்படி ஒரு நிலை என்ர எதிரிக்கும் வரக்கூடாது.... கூடப்பிறந்த தம்பிக்காரனுடன் உண்மையைக் கூட பேச முடியவில்லையே! நொந்து வந்த எனக்கு ஆறுதலாய் இருப்பான் எண்டு எண்ணினன்.... என்ரை காணியிலை ஒரு சிறிய வீட்டை கீட்டை நான் போட இவனும் உதவான் எண்டும் எண்ணினேன் படையெடுத்து வந்த அந்நியன் நான் வாழ்ந்த மனை வீட்டை உடைச்சான். என்ரை உடன் பிறப்பு நான் கட்டிவந்த மனக் கோட்டையை உடைச்சுப் போட்டான். மன உடைவின் கற்குவியல்கள் என்னுள் கனத்தது.



உறுதி கொண்டுவா என்கிறான்? இந்த ஏழு வருட அலைச்சலிலை அதைநான் கவனிக்கவே இல்லை அந்த ஒரு சூட்கேசின் உள்ளறையிலை அது எப்படியும் இருக்கும்....!

சரியடா தம்பி நான் உறுதியோடை வாறன், நான் திரும்பி நடந்தேன் அவன் ம்...ம் எண்ட படி தன்னுடைய வீட்டுக்கு நடந்தான் என்னை வாவெண்டு கூடக் கேக்கலை.

நல்ல வேளை நான் முதலிலேயே அவன்ரை மனுசி பிள்ளைகளைப் போய் பார்த்திட்டன். எங்கையெங்கையோ யார் யாரட்டையோ போகவேணுமெண்டு நினைச்சனான். ஒருடமும் போகேல்லை.... அந்த வீச்சிலை பஸ்சில்ஏறிட்டன். இப்ப போனால் தடையை தாண்டிடலாம்....

பல இடங்களில் பஸ் ஊர்ந்து ஊர்ந்து சென்றது. பஸ் சில இடங்களிலை போக முடியாமலும் நிண்டது... ஏன்? ஆமிக்காரங்கள் வெசாக் பண்டிகைகயை முன்னிட்டு ஏதோ அந்த வீதியாலை ஊர்வலம் போறாங்களாம்! ஓமோம் ஏதேதோ கோசங்களும் அவங்கட கடவுளை வேண்டிக் கொண்டு ஊர்வலம் போறாங்கள் போல கிடக்கு எனக்கென்ன அதிலை, என்ரை கவலை எனக்கு! இது எங்கடை வீதி! இது எங்கடை மண்! இது எங்கடை தேசம்! அதன் பேர் சிறிலங்கா.... எண்டு தான் ஆமிக்காரர் சொல்லிக்கொண்டு போறாங்களாம். எனக்கெண்டால் எரிச்சல் எரிச்சலாக வந்தது. அவரொருவருக்குச் சிங்களமும் தெரியும் எண்டு காட்டுறார். அந்தச் சினத்திலை வெளியிலை பார்த்துக் கொண்டிருக்கிறன். சிவன்கோவில், பிள்ளையார் கோயில், மாதாகோவில் எனப் பல கோவில்கள் என் கண்ணில் பட்டன. அவையொண்டும் என்ரை கவனத்திலை படேல்லை. எனக்கு என்ரை காணியும் என்ரை வேம்பும்தான் தொடர்ந்தும் தென்பட்டன.

வன்னியிலை என்ரை வீட்டுக்கை படுத்துக்கொண்டு நான் எங்கையெங்கையோ போட்டு வந்துட்டன், மனுசி ஆழ்ந்த நித்திரை எண்டால் அவள்பாவிக்கும் லேசாகக் குறட்டை வரும். பிள்ளைகளை பார்த்தால் அதுகளும் நல்ல நித்திரை..... ஒண்டு குமர். மற்றது குமராக இன்னும் இரண்டொரு வருசம் கிடக்கு.

நான் நடந்தது ஒண்டும் அதுகளுக்குச் சொல்லேல்லை. அதுகளின்ரை மனங்களையும் ஏன்

குழப்ப வேணும்? வாய்க்காலில் தண்ணியின்ரை சத்தத்தோடை தொடர்ந்து ஓடுது படுத்திருந்தபடியே பார்வையை திருப்பிப் பார்த்தன்.

படத்துக்கு ஏத்திவைச்ச தேங்காயெண்ணை விளக்கு மங்கிக்கொண்டு எரிஞ்சுது. தேங்காய் எண்ணெய் விட வேணும்.... அவள் பாவி எழும்பினால் கொதித்துவிழுவாள்! அவள் அதிகம் கொதிக்கிறது இதுக்குத்தான்.... மெல்ல எழும்பிச் சென்று உரிய இடத்திலை தடவி தேங்காய் எண்ணெய்ப் போத்தலை எடுத்தன். போத்தல் கனத்தது. என்ன இல்லாட்டிலும் மனுசி இதை குறைய விடாது.... விளக்கில் அதை ஊத்தினேன்? .... சற்று நேரத்தில் வெளிச்சம் பரவியது. படத்தில் இருந்த எனது கப்டன் மகன் என்னப்பா நித்திரை வரேல்லையா? எண்டு கேட்பது போல இருந்தது நான் சொல்லிக் கொண்டு படுக்கைக்கு திரும்பினேன், நீ இருந்திருந்தா உன் சித்தப்பா எனக்கு அடிக்குமாப்போல் நிப்பானா?....

ம்..... படுக்கையில் வீழ்ந்தேன். எண்ணப்பறவை பறந்து பறந்து களைத்து விட்டது. ஏதாவது முடிவு எடுத்தாத்தான் நானும் நித்திரை கொள்ள முடியும். மெதுவாக எழுந்து வெளியில் சென்றேன். வானம் இன்னமும் இருண்டுதான் கிடந்தது.... நான் என் உடல் பலத்தையும் அதன் இயங்கு நிலையையும் அறியச் சிலதைச் செய்து பார்த்தன். உரலின் மேல் ஏறி நின்று உரலை கால்களால் உருட்டி பார்த்தன் முதலில் பிசகியது பிறகு சரியாய் வந்திட்டுது.... உலக்கையை எடுத்து விசிக்கிப் பார்த்தன்.... சில குறிப்பிட்ட பொருட்களை இலக்கு வைச்சு அடிச்சுப் பார்த்தன், இருட்டிலையும் குறி தவறவில்லை. களைப்பும் அவ்வளவு இல்லை..... எடுத்து எல்லைப்படை பயிற்சியை எண்ணிப்பார்த்தன். நல்லவேளை நான் முதலிலேயே அவன்ர மனுசி பிள்ளைகளைப் போய்ப்பாத்திட்டன்.

வெள்ளியொன்று எரிந்தபடி விழுந்தது. இனியும் பொறுப்பது ஒத்துவராது. சண்டித்தனத்துக்கு சண்டித்தனம் காட்டாவிட்டால் எதுவும் சரிவராது.... காணி உறுதியை எடுத்துக்கொண்டு போய் காட்டிறன். அதுக்கு அவன் சரிவரவில்லையெண்டால் என்ரை சாண்டோ விளையாட்டை காட்டுவன். முரண்பட்டு அவன் அடிபிடிக்கு வந்து தரமறுக்கட்டும் பாப்பம்?

என்கைகளை பாத்தன் மெலிஞசாலும் சாண்டோவின் கை சாண்டோவின் கைதான். அவற்றை ஆக்கள் வந்தால் காட்டுறன் என்ர கம்பு விளையாட்டை. நான் கம்பு விசிக்-கினால் கல்லெறி கூட என்ரை மேலிலை படாது.... அப்பிடி ஒரு கம்பை அங்கை எடுக்கமாட்டானா என்ன?

முடிவு எடுத்த உடனை உறக்கம் நினைவுக்கு வந்தது. உள்ளசென்று படுக்கையில் சரிந்தன் நாளைக்கு உறுதியைத் தேடி எடுக்க வேணும்...

கண்விழித்த போது போனவிசயம் என்னப்பா விடியச் சொல்லுறன் எண்டியள், கேட்டபடி மனுசி அருகில் வந்தாள்.

எல்லாம் சொல்லுறன், உந்தச் சூட்கேசைத் தூக்கிக்கொண்டு வா! வாறன் வெளியிலை போட்டு, எழும்பி நடந்தன். எல்லாம் முடித்துக் கொண்டு உள்ளை வந்து மனுசி தந்த தேத்தண்ணியை குடிச்சன். பிள்ளைகள் அப்பதான் எழும்பி வெளியிலை போகுதுகள். அதுகளும் பள்ளிக்கு போக வேணும். தமக்கை தங்கையை அவசரப்படுத்தினாள்.

மனுசி எடுத்து வைச்ச சூட்கேசைத் திறந்து உறுதியைத் தேடினன்.... உறுதி...

நான் ஒன்றும் தேடிக்களைக்கவில்லை. முதல் சுத்து தேடலிலேயே அது கிடைச்சுப் போட்டுது. உறுதி கிடைச்ச சந்தோசத்திலை எங்கடை உறுதி கிடக்கப்பா! எண்டபடி எழும்பினன். உறுதியோடை சில காகிதங்களும் கவர்களும் கீழ விழுந்தன... நான் அவற்றை கவனிக்கவில்லை. உறுதியை மட்டும் எடுத்தபடி மனுசியைக் கூப்பிட்டன்! வந்த மனுசி! கீழை பார்த்துட்டு இஞ்செருங்கோ! என்ன வேலை பாக்கிறியள் உங்கடை உறுதி கிடைச்ச இதிலை நீங்கள் எதை நிலத்திலை கொட்டியிருக்கிறியள். அவள் கூறியபடி குனிஞ்சு எடுத்தாள்..... நான் அதை வாங்கிப் பாத்தன்! அட என்ர கடவுளே! நான் அந்த பிள்ளையின் படத்தையா நிலத்திலே சிந்தினேன்? அது இத்தனை இடப்பெயர்விலையும் தொலையாமல் இந்த உறுதியைப்போல கிடந்திட்டுதே. உதைப் பாருங்கப்பா வாறன் எண்டிட்டு மனுசி போட்டாள் அவளுக்குப் புள்ளையளைப் பள்ளிக்கு அனுப்புற அவசரம்.



என் நினைவுத் தேர் உருளத் தொடங்கிவிட்டது. அது அந்தப் புள்ளையைச் சுற்றி ஓடியது! இந்தியன் ஆமி இங்கை இருந்த காலத்தில கே. கே. எஸ்ஸில அமைதிப்படையின் மறு வாழ்வு முகாம் என்கிற மனித வதை முகாமிலை நான் சிறை இருந்தபோது, கண்டனான். அந்த புள்ளையும் நான் இருந்த அறையிலதான் இருந்தது. உண்மையை சொல்லடா சொல்லடா புலியள் பற்றி சொல்லடா எண்டு எனக்குச் செய்த சித்திரவதையிலை என்ரை உடம்பு முழுவதும் காயம். அப்பாவியான என்ர உடம்பிலை அந்த அறுவாங்கள் அந்த மாதிரி காயப்படுத்தியிருந்தாங்கள். அந்தப்பிள்ளை என்னை ஒரு தாய்போல் பராமரித்தது. மற்றவர்கள் எனது புண்களை பார்த்து அருவருக்க அந்தப் புள்ளை என்ரை மேலிலை அளைஞ்சு அளைஞ்சு புண்களை துடைத்து மருந்து போட்டது. நான் அழுத போதல்லாம் ஆறுதல் சொன்னது.

இந்தியன் ஆமி போகும் போதுதான் எங்களை விட்டான் எங்கள் சிநேகிதம் வெளியிலையும் தொடர்ந்தது. போராளியான அந்தப் பிள்ளை அந்த பிரதேசத்தின் அரசியல் பொறுப்பாளராக மக்களுக்கு சேவை செய்தது. அடிக்கடி என்ர வீட்டுக்கு வரும். அம்மா அம்மா எண்டு மனுசியோடு அன்பாய் பழகும். என்ரை பிள்ளைகள் இரண்டோடையும் அப்ப இழையவள் பிறக்கேல்லை. ஒரு அண்ணனைப் போல் அன்பு அக்கறையுடன் பழகும்...... அந்தப்பிள்ளைக்கு முன்னாலை நிப்பது எண்டால் எனக்கு வலுபுளுகம்.

நானும் அந்தப்பிள்ளையள் ஒபிசுக்கு அடிக்கடி போவேன்.... அது கடற்கரையிலை மெயின்றோட்டோடை இருந்தது. ஒரு முக்கியமான சந்தியும் கிட்டடியில இருந்தது.






மாவீரர்களே!

நீங்கள் களத்தில் மடியும்
கடைசி நேரத்தில்
என்ன நினைத்தீர்?
அந்த நினைவைச்
சுமக்கின்றோம்.
அதனை நிச்சயம்
முடிக்கின்றோம்,
நீங்கள் புதைந்த இடத்தில்
புல்லா முளைக்கிறது?
இல்லையே!
போராடும் எங்களுக்குள்
புதுவீரமல்லவா பிறக்கிறது
நம்புங்கள் தமிழீழம்
நாளை பிறக்கும்.

கடலின் இரைச்சல் புள்ளையின்ரை ஒபிசிலை நிக்கேக்கை தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருக்கும்.

அந்தப் பொங்கிடும் கடற்கரைக்கும் ஒரு பெருமை சரி அதை விடுவம். அந்தப் புள்ளை வேலை செய்கிறதையும் விசாரணை செய்கிறதையும் பார்க்க எனக்கு ஆசை ஆசையாய் வரும். அன்பெண்டா அன்பு! பண்பெண்டா பண்பு! கோபம் எண்டா கோபமில்லை, அங்கேயும் அன்புதான் அந்தப்புள்ளைக்கும் கோபம் வரும் எண்டதை ஒருநாள் நான் கண்டன். எனக்கெண்டால் அதிலை கோபம் தெரிஞ்சதைவிட அறிவுரைதான் தெரிஞ்சது.... உண்மையில புள்ளையின் கோபம் நியாயமானது! அது ஒரு சண்டைபட்டு மண்டைகள் உடைபட்டகேஸ். கொஞ்சப் பேர் வைத்தியசாலையிலே படுகாயங்களோடையும் சாதாரண காயங்களோடையும் கொஞ்சப்பேர் இங்கை விசாரணையிலை..... அவர்களைப்பார்த்த உடனை பிள்ளைக்குக் கோபம் வந்திட்டுது. அந்தக் கோபத்திற்கு காரணம் சரியாய் இருந்தது. இல்லாட்டி அந்தப் புள்ளை கோபிக்காது.



அப்ப அந்தக் கடலிலை ஒரு கட்டளைக் கப்பல் நிண்டது. கரையிலை நிண்டு எங்கடை புள்ளையள் தாக்கமுடியாத தூரத்திலை அது நிண்டுகொண்டு ஆட்லறிச் செல்கள் எல்லா இடங்களுக்கும் வீசி வெடிக்கச் செய்தது. சந்தைகள் கூட முடியவில்லை, வீடுகளில் இருக்கமுடியவில்லை. கடை கண்ணிகள் திறக்க முடியவில்லை. எல்லா இடங்களிலும் செல்கள் வீழ்ந்து வெடித்தன..... ஒருநாள் ஒரு திருமண வீட்டில் திருமணம் நடந்துகொண்டிருக்கும்போது செல்வீழ்ந்து வெடித்தது.... நல்லவேளை மணமக்கள் படுகாயங்களுடன் பின்னர் தப்பிவிட்டனர். தோழனுக்கு நிண்டபொடியன் அந்த இடத்திலேயே....

அப்படியான காலத்திலைதான் இந்த அறுவான்களும் கோஸ்டிச் சண்டைசெய்து மண்டைகளை நொறுக்கிப் போட்டு வந்து நிக்கிறாங்கள்.

பின்னை புள்ளைக்கு கோபம் வருந்தானே.... புள்ளை கேக்கிறதும் நியாயந்தானே....!

இஞ்சை பாருங்கோ ஒரு பொது எதிரி எங்கடை கடலிலை வந்து நிண்டு கொண்டு எங்கள் எல்லோருக்கும் அடித்துக் கொண்டு இருக்கிறான்... அவனுக்கு எங்களால ஒன்றுஞ் செய்யமுடியவில்லை..... அவனுக்கு அடிக்கமுடியேலே. நாங்கள் எங்களுக்கை எப்படி அடிபடமுடியும்? பகைவனைப் பந்தாடமுடியாத நாங்கள், எங்களுக்கை நாங்கள் அடிபட என்ன அருகதை இருக்கு புள்ளையின்ரை கேள்விக்கு ஒருதராலையும் பதில் சொல்ல முடியவில்லை. எல்லோரும் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு நிண்டினம். எனக்கு அந்தப் புள்ளை இன்னுங்கதைக்காதோ எண்டிருந்தது...

அதுமுடிந்து சில நாட்கள் சென்றுவிட்டன... ஒருநாள் அந்தப்புள்ளை என்ரை வீட்டை வந்து எங்கள் எல்லோரோடையும் நல்லாச் சிரிச்சுக்கதைச்சது. நான் அண்டைக்கு அந்தக் கோபத்தோடை கண்ட பிறகு இண்டைக்குத்தான் காணுறன்.... அந்தப்புள்ளையா இந்தப்புள்ளை? கதைச்சுமுடிச்சுப்போகும்போது ஒரு கவரைத்தந்து நாளைக்கு நான்வரும் சத்தம் கேட்டபிறகுதான் இதை உடைக்கவேணும் என்ன? நான்வரக்குமுந்தி உடைக்கவேகூடாது. எண்டு சத்தியம் வாங்கிக்கொண்டு போனது...

அடுத்த நாள் அதிகாலைக்கு முன் டொம் டொம்.... என்ற பெரும் சத்தம் கேட்டது. அது கடல் பக்கமாகத்தான் கேட்டது. என்ன சத்தம்? ஏன்? ஒண்டுந் தெரியேல்லை!

எல்லோரும் எழும்பிவிட்டம்..... எல்லா வீடுகளிலும் மனிதக்குரல்கள்...

கரும்புலி மில்லர் வெடித்த போது எழும்பின சத்தம் போலல்லவா இந்தச்சத்தமும்....

என்ன நடந்தது.....?.

கிழக்கில் சூரியன் மெல்ல எட்டிப்பார்த்துத் தனது சிவப்பு நிறக்கோலத்தை மேகத்தில் காட்டினான். செய்தியும் லேசாய் வந்தது....

கடலிலை நிண்டு ஊரெல்லாம் தாக்கிய அந்தக் கப்பலிலை கரும்புலி பாய்ஞ்சிட்டுதாம்...! அதுக்கு மேலை ஒண்டும் அறியமுடியேல்லை...ம், அந்தப்புள்ளை வரும்தானே....., அப்ப எல்லாம் வடிவாகக்கேட்பம்...., கவரையும் உடைப்பம். புள்ளை வராமல் உடைக்கக்கூடாது. ஊரெல்லாம் ஒரே குதூகலம்.

சனங்கள் எல்லாம் வெளியிலை நிண்டார்கள். பதுங்கு குழிகளுக்குள்ள படுக்கை போட்டுக்கிடந்தவர்கள் கூட கனகாலத்திற்குப்பிறகு வெளிவெட்டையிலை நிண்டதைப்பாக்க மனதிற்கு சந்தோசமாக இருந்தது....

அந்தப்புள்ளை வரவில்லை, ஆனால் செய்தி வந்தது...! கப்பலிலை பாய்ஞ்ச மூண்டு கரும்புலிகளிலை அந்தப்புள்ளையும் ஒண்டாம்! செய்தி இடியாய் இறங்கியது....

நினைவு தெளிந்து மனதை ஒருநிலைப்படுத்திக்கொண்டு, அந்தப்புள்ளை விட்டுப்போன கவரை எடுத்து உடைச்சன்.....

கவருக்குள் அந்தப்புள்ளையின் போட்டோ.... புள்ளை சிரிச்சபடி இருந்தது. உற்றுஉற்றுப் பாத்தேன். மனுசியும் புள்ளையளும் படத்தைப் புடுங்கப்பார்த்தார்கள் நான் விடவேயில்லை. படத்தின் பின் புறத்தில் ஏதோ எழுதப்பட்டிருக்கவேண்டும் படத்தைத் திருப்பினேன்....

என்னை மறந்து விடுங்கள்,
என் இலட்சியத்தை மறந்துவிடாதீர்கள்!

இஞ்செருங்கோ! உறுதி உறுதியெண்டு அவசர அவசரமாத்தேடினியள் இப்ப அந்தத் தம்பியின்ரை படத்தோட அப்பிடியே நிக்கிறியள். நினைவுத்தொடரறுந்தது.... என் கையில் இருந்த புள்ளையின் படத்தைத்திருப்பினேன்... சற்று மங்கினாலும் வாசிக்கக்கூடியமாதிரி புள்ளை எழுதினது அப்பிடியே இருந்தது.



இருந்தது மட்டுமில்லை எனக்கும் ஒரு உண்மையை இடித்து உணர்த்தியது. அண்டைக்கு அந்த விசாரணையின்போது அந்தப் புள்ளை என்ன சொன்னது?

"எங்கடை எதிரி எங்கடை இடத்திலை வந்து நிண்டுகொண்டு எங்கள் எல்லோருக்கும் சண்டித்தனம் விடுறான். அவனுக்கு அடி போடாமல் எங்களுக்கை நாங்கள் அடிபடுறதுக்கு எங்களுக்கு என்ன அருகதை இருக்குது"

என் காதில் இப்போது ஆமிகள் போட்ட கோசங்களும் ஒலித்தன.... இது எங்கள் பூமி இது எங்கள் வீதி இது எங்கள் தேசம் இதன் பேர் சிறிலங்கா.... என்பிடரியில் யாரோ ஓங்கி அறைந்ததுபோல இருந்தது!

இரண்டு பரப்புக்காணிக்காக என் தம்பியோடை அடிபட இருந்தன்....!

எங்கள் வீதியை எங்கடை மண்ணை தங்கடை தங்கடையெண்டு கோசம்போட்டு எங்கடை பகுதிகளில் நிற்பவர்களை வெளியேற்ற உழைக்காமல்.... இதென்ன உடன்பிறப்போடை வெக்கங்கெட்ட சண்டித்தனம்...?

மெல்ல நிமிர்ந்து சுவரில் மாட்டப்பட்டிருந்த எனது கப்டன் மகனின் படத்தைப் பார்த்தன். மீண்டும் அந்தப்புள்ளையின் படத்தைப்பார்த்தன்..... என்மகனின் படத்திற்கு அருகிலை வலதுபக்கமாக சற்று உயரமா இந்தப்புள்ளையின் படத்தையும் மாட்டினா என்ன?.... எப்படி என் எண்ணத்தை மனுசி அறிந்து கொண்டிருப்பாள்....?

ஓமப்பா உந்தத் தம்பியின்ரை படத்தையும் பெருப்பிச்சுப் பிறேம்போட்டு தம்பியின்ரை படத்திற்கு வலப்பக்கமா ஏத்திவைப்பம்.... ஓமப்பா..... எண்டபடி, புள்ளைகளும் பாடசாலைக்கு வெளிக்கிட்டு போகிறார்கள்.

சேட்டைப் போட்டேன் யாழ்ப்பாணம் போகவென்று மீதப்படுத்திவைத்திருந்த காசை எடுத்தேன். பலவீனமான எங்களின் பலம் வாய்ந்த ஆயுதங்களான கரும்புலிகளை எண்ணிக்கொண்டு அந்தப்புள்ளையின் போட்டோவுடன் கடைத் தெருவுக்கு நடந்தேன்.

கதிரவனும் தன் சம்மதத்தை ஒளி வெள்ளத்தால் தெரிவித்தான்....

# அழியாத நினைவுகள்



உணவு மறுப்புப்
போர் ஆரம்பம்:
1988.03.19

ஈகச் சாவு:
1988.04.19



அன்னை பூபதி கணபதிப்பிள்ளை

சோகம் நிறைந்த இளம் பெண்ணொருத்தி தலைவிரி கோலமாய்த் தரையைப் பார்த்திருப்பது போல அந்தக் குருந்தை மரம் தனது பசுமையான கிளைகளையெல்லாம் தரை நோக்கித் தாழ்த்தியவாறு அன்றைய காலைப் பொழுதில் காட்சி தந்தது.

அந்த மர நிழலின் கீழே ஆயிரக்கணக்காய் மக்கள் புடைசூழ்ந்திருக்க, தனது உணவு மறுப்புப் போரினை ஆரம்பித்திருந்தாள் அந்தத் தென்தமிழீழத் தாய். ஆம், அவள் ஒரு சாதாரண தாய்தான். ஆனால், தனது தாய் நாட்டின் மீதும் தன் இன மக்கள் மீதும் பற்றுறுதி கொண்ட துணிச்சல்காரி.

பட்டினி கிடந்து தம் பிள்ளைகளை வளர்ப்பதென்பது ஒன்றும் புதிதான விடயமல்ல எம் இனத்தின் அன்னையருக்கு. ஒரு இனத்தின் பொதுவான குறிக்கோளை எட்டுவதற்காய்த் தனது உயிரையே மாய்க்கும் சீலத்தை வரித்துக் கொண்டு பசி கிடப்பதென்பது சாதாரண விடயமா? சாமானிய மனிதர்களால் முடிக்கக்கூடிய கடப்பாடா? தவிர்க்க முடியாத தருணத்தில் ஒரு நேர உணவையோ, அன்றி ஒருநாளைய உணவையோ தவிர்த்தோ, இழந்தோ மட்டும் இருக்கமுடியும் எம்மால், ஒரு திங்கள் வரையான உணவை மறுத்து ஈகம் செய்ய முடியுமா? ஐயகோ! வயிற்றில் பெரும் தீயல்லவா எரிமலையாய்க் கிளம்பும். ஆனால் அந்தத் தாய், புன்னகை தவழ்ந்த முகத்தினளாய் அல்லவா வீற்றிருந்தாள். அவளுக்கு நன்கு தெரியும், இளமகன் திலீபன் நல்லூர் வீதியில் நீர் கூட அருந்தாது பன்னிரு நாட்களில் புரிந்திட்ட ஈகம். ஒரு இளவலால் அது முடியுமாயின், அவ்விளவல்களையே ஈன்றெடுக்கும் தாயினத்தால் முடியாதா என நினைத்தாள் போலும். அதனால் தான் அவள் முகம் மலர வீற்றிருந்தாள். இந்திய 'அமைதிப்படை'அடாவடித்தனங்களால் அவள் பற்றுறுதியைக் கலைக்க முயன்று இறுதியில் தோற்றேகின. வல்லரசு என்னும் இந்தியாவின் தலைக்கிறுக்கம் ஒரு தாயிடமும் தோற்றுப்போனது.

1988 சித்திரை 19ஆம் நாள் அன்னையின் இறுதி நாள். தான் நினைத்த, தான் தேர்ந்த இலட்சியப் பாதையில் தமிழருக்காய் உயிர் கொடுத்துச் சென்றாள். மட்டுநகர் மாமாங்கம், அன்னை பூபதியின் இறுதிப்பயணத்திற்காய்த் தயாரானது. அணிவகுத்தனர். அன்னையின் இலட்சியப்பயணத்தின் இறுதிப்பயணம் வெகு எழுச்சியாய் நடந்தேறியது. வருடந்தோறும் அன்னை பூபதியின் நினைவுநாளில் எம்மண்ணுக்காய் ஈகம் செய்த அனைத்து நாட்டுப்பற்றாளர்களையும் எம் மக்கள் நினைவு கூர்ந்து வணக்கம் செலுத்தி வருகின்றனர்.

நினைவு நாள்:
ஏப்ரல் 19

இலங்கை–இந்திய கூட்டுச்சதிக்குப் பலியான

# பன்னிரு வேங்கைகள்

நினைவாக...



## பன்னிரு வேங்கைகளின் வீரகாவியம்:

இந்திய இலங்கை ஒப்பந்தத்தின் பிரகாரம், நிராயுத பாணிகளாக தமிழீழத்தின் வடகடற்பிராந்தியத்தில் பயணம் செய்த யாழ் மாவட்டத் தளபதி லெப்.கேணல் குமரப்பா, திருமலை மாவட்டத் தளபதி லெப்.கேணல் புலேந்திரன், மேஜர் அப்துல்லா உட்பட 15 வேங்கைகளை 03.10.1987 அன்று சிறீலங்காக் கடற்படை கோழைத்தனமான வகையில் கைது செய்தது. ஒப்பந்தத்திற்கு முரணாக சிங்கள அரசு இந்திய அரசின் ஒத்துழைப்போடு இவர்களை விசாரணை செய்ய முற்பட்ட வேளையில் 05.101987 அன்று சயனைட் உட்கொண்டு வீரகாவியம் படைத்தனர் பன்னிருவீரவேங்கைகள்.

தீருவில் பன்னிருவர் நினைவுச்சின்னம்



# உலகெங்கும் தமிழீழ மாவீரர் நாள் நிகழ்வுகள் 2002







கனடா





# உலகெங்கும் தமிழீழ மாவீரர் நாள் நிகழ்வுகள் 2002

ரஷ்யா









சவுதிஅரேபியா



# உலகெங்கும் தமிழீழ மாவீரர் நாள் நிகழ்வுகள் 2002



ஆனிப் புதல்வர்கள் 2003



டென்மார்க்








சுவிற்சலாந்து



# உயிர்மூச்சாகத்தொடரும்
## கேணல் சங்கர்

நினைவு நாள்:
செப்ரெம்பர்
26





# சரித்திரம் மறக்காத சோக நிகழ்வு

மனிதன் பிறக்கும்போதே சாவும் அவனோடு சேர்ந்து பிறப்பெடுக்கிறது. அந்தச்சாவின் பிடியிலிருந்து யாரும் தப்பிவிட முடியாது யாரும் ஓடியொழிந்துகொள்ளவும் முடியாது. அது வாழ்வின் ஒரு நிகழ்வாக, என்றோ ஒரு நாள் எதிர் கொள்ளப்படவேண்டியதுதான். இப்படிக்கூறி நாம் சங்கர் அண்ணையினுடைய சாவிற்கு ஆறுதல் கூறமுடியாது. அவரது சாவு தனி மனிதனின் மரணம் அன்று. ஒரு சகாப்தத்தின் முடிவும் அன்று. சரித்திரம் மறக்காத சோகநிகழ்வு தமிழினத்தின் தேசிய ஆன்மாவை உசுப்பிவிட்ட நிகழ்வு. சுதந்திர வேட்கையைக் கொழுந்து விட்டெரியச் செய்த நிகழ்வு.

சங்கர் அண்ணையினது வாழ்வுப் பாதை வித்தியாசமானது; தனித்துவமானது. மனிதர்களது இருப்பைவிட மனிதர்களது செயற்பாடுதான் முக்கியமானது என வாழ்ந்து காட்டியவர். அவர் அறிமுகமான நாள் முதல் அவருக்குள் ஓர் அபூர்வ சக்தி இருப்பதைக் கண்டேன். அது அவரது அனுபவத் திரட்சியாகவும் ஆளுமை வீச்சாகவும் எல்லோரையும் ஈர்த்தது. அது எமக்கிடையே ஆழமான நட்பாக வளர்ந்தது.

எமது விடுதலை இயக்கம் நெருப்பாறுகளைத் தாண்டிய வேளைகளிலும், புயல்களையும் பூகம்பங்களையும் சமாளித்த வேளைகளிலும், எரிமலைகளை எதிர்த்து நின்று எதிர்நீச்சல் போட்ட வேளைகளிலும் அவர் என்னோடு உறுதுணையாக நின்றார். விதையாக இடப்பட்ட எமது இயக்கம் முளைத்து, துளிர்த்து, பெருவிருட்சமாக எழுந்து நிற்கின்ற ஒவ்வொரு வளர்ச்சிப் பாதையிலும் அவர் உறுதியாகப் பங்கெடுத்தார்.

அவர் கண்ணியமானவர்; நேர்மையுள்ளவர்; இரக்க சிந்தனையாளர்; எல்லாவற்றுக்கும் மேலாக ஓர் இலட்சியவாதி. அந்த இலட்சியவாதியினது இழப்பு ஈடுசெய்யமுடியாத பேரிழப்பு. அந்த இலட்சியவாதியினது வழியிலேயே அவரது குடும்பமும் ஒன்றிப்போயிருந்தது. அந்த வகையில் அவரது உடன்பிறப்புகளில் மூவர் இந்த விடுதலைப் போரிற்கு தம்மை அர்ப்பணித்திருக்கிறார்கள்.

அவரது மூளையத்தின் மென்மையான இழைகளில் தவழ்ந்த உள்ளத்து உணர்வுகளை நான் அறிவேன். அவரது பசுமையான நெஞ்சத்திற் பற்றியெரிந்துகொண்டிருந்த விடுதலை வேட்கையையும் நான் அறிவேன். அவர் உண்மையில் இறந்துவிடவில்லை எமது விடுதலை வரலாற்றின் உயிர்மூச்சாகத் தொடர்ந்து வாழ்கிறார்.

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தமிழீழம்.





நன்றி:
கேணல் சங்கர்
அவர்களின்
இரண்டாம்ஆண்டு
நினைவு தினத்தில்
வெளியிடப்பட்ட
**சங்கரண்ணா !**
**சாவு உனது முடிவல்ல**
என்ற நூலில்
இருந்து...





# எனது இதயத்தின் துடிப்பு

யாரும் சத்தம் போட்டு, நீ என்று கதைத்தாலே அதைத் தாங்கும் இதயம் எனக்கு இல்லை

அப்படிப்பட்ட என் வாழ்க்கை எதையும் தாங்கும் இதயமாகிவிட்டது.

காலத்தின் கோலம்.

1977 இல் கப்டன் பண்டிதருடன் எனது மைத்துனர் வசீ (லெப். சித்தாத்தன்), எனது அம்மப்பாவிடம் கிணற்று வெடி மருந்து கேட்டு வீட்டிற்கு வந்தபோதே ஓரளவு புரிந்துகொண்டேன்.

1978ஆம் ஆண்டு மனோகரனுக்கும் (கப்டன். கரன்) எனக்கும் திருமணப் பேச்சு வந்தபோது, சொந்த மைத்துனர் என்பதால் மறுப்புத்தெரிவிக்கவில்லை.

தமையனார் சொர்ணி (கேணல் சங்கர்) திருமணமாகாது இருக்கும் போது ஏன் தம்பி கரனிற்குத் திருமணம் பேசுகிறீர்களென மாமியிடமே கேட்டபோது ஒரு கடிதம் எடுத்துத் தந்தா 77ஆம் ஆண்டு சொர்ணியால் தம்பியாருக்கு எழுதப்பட்ட கடிதம். தமிழீழம் தான் என் இலட்சியம். திருமணம் வேண்டாம். 7 மணி பஸ் பழுதடைந்தால் 8 மணிபஸ் போகவேணும்தானே போகட்டும் என்று கடிதவரிகள் அமைந்திருந்தன.

சரி இரண்டாவது மைத்துனர் சொர்ணியும் நாட்டுக்கான போராட்டத்திற்காக...

புகுந்த வீட்டிற் போராட்டக்காறர்கள். என்ன செய்கிறது என்று இருக்க, புகுந்த வீட்டின் தலைவி - மாமி திடீரென மாரடைப்பால் இறந்துவிட்டார்.

எனது அப்பா தபாலதிபராக இருந்த போது, சிறிமா ஆட்சிக்காலத்திற் சிங்களச் சோதனை சித்தியடையாததால் வேலையிலிருந்து நிறுத்தப்பட்டபோது ஏற்பட்ட தாக்கம் அடிமனத்திற் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருந்தது. அந்தத் தாக்க வெறியால் ஒற்றுமையாகப் புகுந்த வீட்டின் போக்கில் என்னை மாற்றிக்கொண்டேன்.

வெளிநாட்டிலிருந்து வந்த மைத்துனர் சொர்ணி,

ஒரு பொறியியலாளராக இருந்தும் சும்மா இருப்பது பலருக்கும் கேள்விக்குறியானதைச் சமாளிக்க மன்னாரில் இரண்டு மீன்பிடி ரோலர்களை வாங்கி விட்டதுடன், என் கணவரும் அவரது தம்பியுமான கரனுக்கு, 18-09-80 இல் தனது பிறந்த நாளன்று ஒரு மாட்டுப்பண்ணையையும் ஆரம்பித்துக்கொடுத்தார்.

1980 ஆம் ஆண்டே, போராட்டத்துடன் சம்பந்தப்பட்டவர்கள் என முத்திரை குத்தாதகுறை. இராணுவம், பொலிஸ், சி.ஐ.டி என வருவார்கள். எப்படி எப்படிக் கதைக்க வேண்டும் என்று முன்னெச்சரிக்கையாகக் கூறிவிடுவார்கள். புலிகளுடன் தொடர்பு எனத்தங்களைப் பற்றி விசாரிக்கத் தொடங்க அதிலிருந்து தப்பிக்கொள்ளத் தாங்களே தங்களைப் பற்றி பெட்டிசன் போடுவார்கள்.

'புளொட்டுடன்' தொடர்பு என்று அதில் இருக்கும் இராணுவத்தினரும் பொலிசாரும் குழம்பி விடுவார்கள். இவர்கள் நல்லா இருப்பது பிடிக்காமல் இப்படிப்பெட்டிசன் வருகுது என இராணுவத்தினரும் பொலிசாரும் நினைத்தனர்.

1983இல், சித்தாவின் கைதைத் தொடர்ந்து, இராணுவ பொலிஸ் கெடுபிடியால், வெளிநாடு போவதாகக் கூறிவிட்டு சொர்ணி இந்தியா சென்றார். பெண் சகோதரிகள் இல்லாத, ஆறு ஆண் சகோதரர்களைக் கொண்ட குடும்பம் எனது புகுந்த வீடு.

நான்தான் அங்கு முதற்பெண். தங்கள் சகோதரிபோலவே என்னைக் கருதினர். எப்படி என்னை வளர்த்தார்கள் என்று எழுத வார்த்தைகள் இல்லை.

தூசுபட்டால் தூசுக்கும் கூடத் தண்டனை கொடுக்க முடிந்தாற் கொடுக்கத் தயங்க மாட்டார்கள். அப்படி ஒரு நுணுக்கமான கவனிப்பு.

1983 இல் ஒவ்வொருவராகப் புறப்பட நான் தனிமைப்படத்தொடங்கினேன். இயக்கச்செயற்பாடுகளில் எல்லோரும் ஈடுபடத்தொடங்க, தனிமை அதிகரித்துச் சென்றது.

என்னைக் கரடுமுரடாக வளர விட்டிருக்கலாமே என அடிக்கடி கேட்டுப் பேசி அழுவேன். பதில் ஏதும் பேசாது தலை குனிந்து நிற்பார்கள்.

05-10-1987 இல் கரன் வீரச்சாவடைய, 5வருடங்கள் விதவையாக இருந்தேன்.

04-05-1992 இல் பிள்ளைகள் இருவருடன் என்னைப் பொறுப்பேற்றார் சொர்ணி.

இந்தியாவில் இருந்த என்னை 1990ஆம் ஆண்டு நாட்டுக்கு அழைத்தார் சொர்ணி. இருந்தும் 1992 இலேயே என்னைத் திருமணஞ்செய்தார். இரண்டு வருடம் திருமணத்தைத் தள்ளிப்போட்டமை பற்றிப் பலருங்காரணம் கேட்டனர். திருமணத்தின் பின் ஒரு நாள், "இரண்டு வருடமாக முடிவு செய்தியளா? என்ன குழப்பம்" என்று சொர்ணியிடம் கேட்டேன். "நீ திரும்ப விதவையாகக் கூடாதென்ற காரணத்தால் முடிவெடுக்க முடியவில்லை" என்றார். ஆனால் இன்று இரண்டாவது தடவையாக விதவையாகி உள்ளேன். எனக்கு ஏற்பட்டது ஒருவருக்கும் ஏற்படக்கூடாது.

வேறு எவருக்கும் இப்படி நடந்ததாக நான் கேள்விப்படவும் இல்லை. கடவுளை நம்பினேன். இருநாள் முன் கனவு ஒன்று கண்டேன் இரண்டாவது தடவை வராது என நம்பினேன். ஆனால்....

இறுதி மூச்சே நாடு என்பார். எல்லோரும் முன்னேறவேணும், படிக்க வேணும், பண்பு, நேர்மையுடன் வாழ வேணும் என்பார்.

நகம் அளவேனும் எரிச்சல், பொறாமை, பொய், பெருமை எதுவும் இல்லாத தூய்மையானவரைக் கணவனாகக் கொண்டு அவரோடு சிறிது காலமே வாழ்ந்தாலும் அதுவே போதும்.

சில நேரங்களில் மனஸ்தாபங்கள் ஏற்படும். கூறுவார் செருப்பு இல்லாததற்குக் கவலைப்படக் கூடாது. கால் இல்லாதவனை நினை. செருப்பில்லாத கவலை இராது என்பார்.

மேலே பாராது கீழே பார் என்பார். கிளை மோரில் போனாலும் போவேன் என வாய் கூசாமற் கூறுவார். எரிச்சற்படுவேன். தலைவர் இருக்கும் வரை ஒரு குறையும் விடமாட்டார். தலைவரை நம்பு என்பார்.

தலைவர் காலத்தில் தமிழீழம் நிச்சயம். எல்லாம் விடுதலையின் பெயராற் பொறுமையாக இரு என்பார்.

வீட்டைக் கவனிக்காது நாடு, நாடு என்று திரிந்தாலும் பிள்ளைகளின் படிப்பில் அக்கறை காட்டினார். எல்லோரின் பிள்ளைகளும் படித்து முன்னேறவேண்டும் என்ற ஆசை நிறைய உண்டு.

தன்னைப்போல பிறரை நேசிக்கும் குணம் படைத்த மனிதர்கள் சிலர். அதில் ஒருவர் இவர்.

சுயநலமற்ற தன் குணத்தையும், நாட்டின் தேவையையும் எங்கள் மூவருக்கும் ஊற வைத்துத்துவிட்டுப் போட்டார்.

அழுவதற்காகக் கட்டப்பட்ட சமாதியல்ல எனக்கூறி அடிக்கடி துயிலும் இல்லம் செல்வார். எனக்கு அடிக்கடி துயிலுமில்லம் போய்ப்பார்க்கும்மனநிலை இருக்கவில்லை. தாங்கும் சக்தி இல்லை. தற்பொழுது துயிலும் இல்லமே கதி என ஆக்கிவிட்டார்.

சுகா மனைவி






# வெற்றிகளின் பின்னால் இருந்த பேராற்றல்



இடிவிழுத்திப் போகும்
இச்செய்தி வருமென்றா
உன்னை வழியனுப்பி வைத்தோம்
போர் ஓய்ந்த நாளிலும்
எமக்கேன் இடி விழுகின்றது
குருதி நரம்புகள் உறைந்துபோக
நெஞ்சில் குத்தீட்டி ஏறுகின்றது
கேணல் ராயு
குயிலனெவும் இவன் குறிக்கப்பட்டான்
அதிகம் பேசாமல்
அதிகம் சிரியாமல்
அதிக அதிசயம் நிகழ்த்திய அதிசயன்.
தலைவனருகில் தன்னை தயார்படுத்தியதால்
கதிரவன் ஒளிகசிந்து ஊறியகாளை
நுட்ப மதி நிறைந்த நூதனன்.
விடுதலையன்றி வேறொன்று சிந்தியா விவேகன்.
புதிய அரும்புகள் முளைகொள்ள
நாற்றங்கால் போட்ட நாயகன்.
பெரு வெற்றிகள் ஒவ்வொன்றின் பின்னாலும்
இந்த புலி மகனின் பேராற்றலும் இருந்தது

பகை நெஞ்சேறிய குண்டுகள் ஒவ்வொன்றையும்
இவன் கைகள் தொட்டு நீவின
எல்லாவைற்றையும் தூக்கிவைத்துவிட்டு
இத்தனை அவசரமாய்
சாவு அள்ளிப் போனதை தாங்கமுடியவில்லையே
ராயு.
ஒரு களத்தில் நீ மடிந்திருக்கலாம்
நோய் தின்று போனது தான் தாளமுடியவில்லை
அண்ணனைக் கூட மீண்டு தரிசிக்காமல்
அகல் விளக்கே அணைந்து விட்டாயே
நீ வளர்த்த பயிர்களைக் கொண்டே
நின் கனவை நனவாக்குவோம்
சோகம் கப்பிய முகத்தை துடைத்து விட்டு
உன் கனவை நனவாக்குவோம்
அது ஒன்றே உனக்கு காணிக்கை
என்றாலும் உன் பிரிவெனும் கொடுமை
நீண்ட நாளிருக்கும் எம் நெஞ்சில்.

● புதுவை இரத்தினதுரை







லெப்.கேணல்.நாதன்



கப்டன்.கஜன்

# துடுப்புக்களின் தீரா வலித்தல்

சுபாஸ்

உடைத்தெறிந்த துடுப்புக்களின்
இன்னும் அடங்காத் துடிப்பு
என்றும் கூர்மைமழுங்கா
வலிமையின் உயிர்ப்பே

எதிர் நீச்சலிடுகின்ற
எல்லாவற்றுள்ளும்
அதே இயக்கம்

துடுப்பாக இருத்தல்
துடுப்பாக உழைத்தல்
துடுப்பாக வலித்தல்
வலிமை கொள் வாழ்வே

துடுப்புக்களை
உடைத்தெறிந்த பின்னாலும்
உடைக்க முடியாது போனது

மரணமில்லா வாழ்வின்
திசை நோக்கிய
தீரா வலித்தலை

தீராது வலிக்கும் துடுப்புக்களும்
சுதந்திரத் தூரிகையே
சுதந்திரத் தூரிகையின்
தீராவலி கொண்ட இயக்கம்
என்றைக்குத் தான் தணிந்தது?

நினைவு நாள்:
ஒக்ரோபர் 26



பிரான்சில் இருக்கும் லெப்.கேணல் நாதன், கப்டன் கஜன் ஆகியோரின் கல்லறை



# துயரப்பறவைகளின் துயரிசைப்பாடல்

அல்லது

# அதிமானுடர் பற்றிய சங்கீதம்









**வீரர்களே!**

உங்களின் முகங்களை
எங்களுக்கு ஒருமுறையேனும்
பார்க்க முடியாது போனதையிட்டும்
எங்களுக்காகவும்
நீங்கள்
எரிநெருப்பில் நின்று
களமாடியதையிட்டும்
என்றுமே காணமுடியாது போன
முற்றத்தில் பூக்கள் மலர்வது போன்ற
உங்களின் புன்னகையையிட்டும்
நாங்கள் கலங்குதல் செய்தோம்.

மழைத்துளி போன்று
வரண்ட மனங்களில்
சிந்தும் உங்களின் நினைவு
ஒரு வசந்த காலத்தை
எமக்கு ஞாபகப் படுத்துகிறது.
உங்களைப் போல..
உங்களைப் போல வாழ முடியாது
போனதையிட்டும்

உங்களுக்கருகிலேனும் நின்று
தொட்டு, ஆவி தழுவிடப் பேசும்
பாக்கியமும் இல்லாது போனதையிட்டும்
நாங்கள் கலங்குதல் செய்தோம்.

வயல் வெளிகளிலோ
பசுமை நிறைந்த புல்வெளிகளிலோ
கானகங்களிலோ
நீங்கள் பாடிய பாடல்கள் எதுவுமே
எங்கள் செவிகளில் ஏறாதுபோய்
துயரமுந்திச் சாகும்
துயரப்பறவைகளாகிய எங்களுக்கு
தற்காலிகமாக
தங்கிய கூடுகளில்
ஒரு ஓநாய் அல்லது ஓநாய்க் கூட்டம்
ஒரு மரநாய் அல்லது மரநாய்க் கூட்டம்
தாக்கியழிக்க வருவதான பயம்.
திசையெல்லாம் அலையும் எங்களை
எழுப்பும் சங்கீதத்தை
எப்படி காற்றிலும் ஒழித்து வைத்தீர்கள்.

**சுபாஸ்**



# சரித்திரப் புயல்கள்



ஈழம் பிறப்பதற்காய் நீங்கள்
எவ்வளவைச் சுமந்தீர்கள்
ஈழத்தை பாதுகாத்தீர்
பாதணிகளே இல்லாமல்
விழுப்புணடைந்தும் ஈழத்தை
விழி மூடாது காத்தீர்!!



உங்களுக்கு பிடித்தெல்லாம்
இருளும் மழையும் வெயிலும்
காற்றும் புயலும் பனியும் எனென்றால்
நீங்கள் எதற்கும் சாயாத சரித்திரப் புயல்கள்
எப்போ எப்படி வீச வேணுமென்பதற்காய்
உங்களுக்குள்ளே பாதை போட்டவர்கள்!!

நீங்கள் உறங்கின கல்லறைகள் கழையப்பட்டன
கழையப்பட்ட இடத்திலே இன்று முளைத்திட்டன
உருவெடுத்த கல்லறையில் ஊர் மக்களால் பூ மழையாம்
ஊர்ப் பறவைகள் கூட பூ சொரிகிறது தம்மினம் காத்ததிற்காய்
ஊரார்க்காய் நெருப்புக்குள் வாழ்ந்த உன்னத மாமனிதர்கள்
உங்களைத் தொடர்ந்த வேங்கைகளை எவரும் தொடமுடியா!!

ஈழத்து மக்களுக்கு மட்டும் நல்விடிவு கொடுக்கவில்லை
ஈழத்து வாழ் அனைத்து உயிரினங்கள் உயிர் காத்து கொடுத்தீர்கள்
அதற்காய் மலர்கள் உங்கள் மீது உம்மவர்கள் தூவுகிறோம்

அனைத்து மலர்களும் உங்களுக்காய் என்கிற போது
மலர்களைப் பெற்ற மரம் பெருமை கொண்டே வாழ்கிறது!!

படை படையாய் நீவீர் எழுந்து சரிந்ததனால்தான்
சரிந்த இடத்தில் எம்மவர் தலைசாய்த்து தூங்குகின்றனர்
தமிழீழத்தை சுற்றிவரும் சூரியக்கதிர்கள்தான் நீங்கள்
நீங்கள் எதிரியை கதிர்களால் சுட்டதினால் விக்கித்தவிக்கிறான்
உணரமுடியும் பார்க்க முடியாத காற்றுக்களாய்
உலக மக்கள் மனமெலாம் புதுந்துவிட்ட மாவீரர்களே!!

நீங்கள் அணிவகுத்து காத்த ஈழம்
எந்த இடையூறையும் தாண்டி மலரும்
உங்கள் வீரமரணங்களினால் பேச்சாம்
நாங்கள் பேசுவோம் பலம் வரும்வரை
நாங்கள் பூசிப்போம் நேசிப்போம்
எங்களுக்காய் உயிர் தந்த மாவீரர்களே!!

*



# வீரச்சாவைத் தழுவிக்கொண்ட மாவீரர்களின்

தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் 27.11.1982 தொடக்கம் 31.08.2003 வரை மாவட்டவாரியாக வீரச்சாவடைந்த மாவீரர்கள் விரிப்பு

| | யாழ் | | மட்டு | | வன்னி | | திருமலை | | முல்லை | | மன்னார் | | வெளி | | மொத்தம் | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | |
| 1982 | 01 | - | - | - | - | - | - | - | - | - | - | - | - | - | 01 | 00 | 01 |
| 1983 | 11 | - | - | - | - | - | 04 | - | - | - | - | - | - | - | 15 | 00 | 15 |
| 1984 | 20 | - | 07 | - | 03 | - | 08 | - | 06 | - | 06 | - | - | - | 50 | 00 | 50 |
| 1985 | 46 | - | 60 | - | 14 | - | 41 | - | 08 | - | 14 | - | 05 | - | 188 | 00 | 188 |
| 1986 | 91 | - | 92 | - | 20 | - | 48 | - | 21 | - | 36 | - | 09 | 01 | 317 | 01 | 318 |
| 1987 | 246 | 05 | 76 | - | 46 | 03 | 54 | - | 17 | 01 | 48 | 05 | 15 | - | 502 | 14 | 516 |
| 1988 | 126 | 07 | 114 | 01 | 39 | 01 | 37 | - | 18 | 01 | 18 | 01 | 16 | - | 368 | 11 | 379 |
| 1989 | 147 | 02 | 86 | - | 54 | - | 47 | - | 37 | - | 27 | - | 18 | - | 416 | 02 | 418 |
| 1990 | 277 | 41 | 178 | 04 | 140 | 11 | 124 | 02 | 73 | 11 | 64 | 01 | 33 | 02 | 889 | 72 | 961 |
| 1991 | 510 | 104 | 310 | 18 | 180 | 33 | 169 | 18 | 114 | 19 | 101 | 15 | 22 | 01 | 1406 | 208 | 1614 |
| 1992 | 224 | 45 | 240 | 09 | 83 | 06 | 65 | 01 | 40 | 07 | 48 | 06 | 13 | - | 713 | 74 | 787 |
| 1993 | 215 | 49 | 279 | 18 | 110 | 28 | 76 | 06 | 55 | 11 | 61 | 12 | 05 | - | 801 | 124 | 925 |
| 1994 | 90 | 11 | 161 | - | 30 | - | 40 | - | 18 | 01 | 22 | - | 02 | - | 363 | 12 | 375 |
| 1995 | 419 | 177 | 433 | 15 | 150 | 43 | 81 | 06 | 60 | 25 | 64 | 19 | 10 | 03 | 1217 | 288 | 1505 |
| 1996 | 446 | 142 | 320 | 33 | 129 | 53 | 83 | 13 | 54 | 26 | 55 | 14 | 04 | 04 | 1091 | 285 | 1376 |
| 1997 | 521 | 227 | 641 | 65 | 168 | 92 | 118 | 19 | 91 | 52 | 46 | 44 | 15 | 08 | 1600 | 507 | 2107 |
| 1998 | 360 | 270 | 429 | 94 | 133 | 140 | 99 | 36 | 58 | 69 | 54 | 22 | 17 | 16 | 1150 | 647 | 1797 |
| 1999 | 362 | 203 | 323 | 68 | 144 | 118 | 79 | 19 | 86 | 57 | 51 | 23 | 07 | 05 | 1052 | 493 | 1545 |
| 2000 | 473 | 318 | 228 | 79 | 234 | 179 | 100 | 27 | 105 | 78 | 62 | 45 | 35 | 17 | 1237 | 743 | 1980 |
| 2001 | 171 | 117 | 119 | 28 | 74 | 58 | 45 | 12 | 41 | 27 | 31 | 22 | 08 | 06 | 489 | 270 | 759 |
| 2002 | 08 | 05 | 04 | 05 | 05 | 01 | 03 | - | 02 | 03 | - | 01 | - | 01 | 22 | 16 | 38 |
| 2003 | 23 | 03 | 05 | 01 | 04 | 01 | 01 | - | 04 | - | 03 | 01 | 01 | - | 41 | 06 | 47 |
| ஆ.பெ.மொ | 4787 | 1726 | 4105 | 438 | 1760 | 767 | 1322 | 159 | 908 | 388 | 811 | 231 | 235 | 64 | 13928 | 3773 | 17701 |
| மொத்தம் | 6513 | | 4543 | | 2527 | | 1481 | | 1296 | | 1042 | | 299 | | 17701 | | |

# மொத்த விரிப்பு



தகவல்: தமிழீழ மாவீரர் பணிமனை
அரசியற்றுறை
தமிழீழம்

## 2003ஆம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் 31ஆம் நாள் வரை தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் வீரச்சாவடைந்த மாவீரர்கள் விரிப்பு

| | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1982 | 01 | - | 01 |
| 1983 | 15 | - | 15 |
| 1984 | 50 | - | 50 |
| 1985 | 188 | - | 188 |
| 1986 | 317 | - | 318 |
| 1987 | 502 | 14 | 516 |
| 1988 | 368 | 11 | 379 |
| 1989 | 416 | 02 | 418 |
| 1990 | 889 | 72 | 961 |
| 1991 | 1406 | 208 | 1614 |
| 1992 | 713 | 74 | 787 |
| 1993 | 801 | 124 | 925 |
| 1994 | 363 | 12 | 375 |
| 1995 | 1217 | 288 | 1505 |
| 1996 | 1091 | 285 | 1376 |
| 1997 | 1600 | 507 | 2107 |
| 1998 | 1150 | 647 | 1797 |
| 1999 | 1052 | 493 | 1545 |
| 2000 | 1237 | 743 | 1980 |
| 2001 | 489 | 270 | 759 |
| 2002 | 22 | 16 | 38 |
| 2003 | 41 | 06 | 47 |
| மொத்தம் | 13928 | 3773 | 17701 |

## 31.08.2003 வரை வீரச்சாவடைந்த கரும்புலிகளின் விரிப்பு

| | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|
| தரைக் கரும்புலிகள் | 59 | 18 | 77 |
| கடற் கரும்புலிகள் | 117 | 46 | 163 |
| மொத்தக் கரும்புலிகள் | 176 | 64 | 240 |

## முக்கிய முகாம் தகர்ப்புக்கள், படை நடவடிக்கைகளில் வீரச்சாவடைந்த மாவீரர்கள் விரிப்பு

| | |
|---|---|
| ஆ.க.வெ.சமர் | 604 |
| மணலாறு | 233 |
| தவளை நவடிக்கை | 460 |
| கொக்குத்தொடுவாய் | 175 |
| இடிமுழக்கம் | 181 |
| சூரியக்கதிர்(ரிவிரச) | 438 |
| ஓயாத அலைகள்-01 | 315 |
| சத்ஜெய-02 படைநடவடிக்கையும் அதன் மீதான எதிர்த்தாக்குதல்களும் | 100 |
| சத்ஜெய-03 படைநடவடிக்கையும் அதன் மீதான எதிர்த்தாக்குதல்களும் | 133 |
| பரந்தன் ஆனையிறவு | 193 |
| வவுணதீவு | 103 |
| கிளி-பரந்தன் படைத்தளம் மீதான ஊடுருவித் தாக்குதல் | 300 |
| ஓயாத அலைகள்-02 | 403 |
| ஜெயசிக்குறு படைநடவடிக்கையும் அதன் மீதான எதிர்த்தாக்குதல்களும் | 2146 |
| ஓயாத அலைகள்-03 | 1336 |
| ஓயாத அலைகள்-04 | 181 |
| தீச்சுவாலை முறியடிப்புச் சமர்(அக்கினிகீல) | 141 |

## 27.11.82 தொடக்கம் 31.08.2003 வரை வீரச்சாவடைந்த கரும்புலிகளின் மாவட்டவாரியான விரிப்பு

|  | தரைக் கரும்புலிகள் | | | கடற் கரும்புலிகள் | | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் | |
| யாழ்ப்பாணம் | 19 | 12 | 31 | 56 | 38 | 94 | 125 |
| மட்டு-அம்பாறை | 23 | 02 | 25 | 21 | - | 21 | 46 |
| வன்னி | 06 | 02 | 08 | 12 | 02 | 14 | 22 |
| திருமலை | 04 | - | 04 | 10 | 02 | 12 | 16 |
| முல்லைத்தீவு | - | 01 | 01 | 07 | 02 | 09 | 10 |
| மன்னார் | 04 | 01 | 05 | 09 | 01 | 10 | 15 |
| வெளி | 03 | - | 03 | 02 | 01 | 03 | 06 |
| மொத்தம் | 59 | 18 | 77 | 117 | 46 | 163 | 240 |

# தமிழீழ மாவீரர் துயிலும் இல்லங்கள்



**யாழ்ப்பாணம்**

தென்மராட்சி - கொடிகாமம் மாவீரர் துயிலும் இல்லம்

வடமராட்சி

வலிகாமம் - கோப்பாய் மாவீரர் துயிலும் இல்லம்

வடமராட்சி - உடுத்துறை

சாட்டி

**வன்னி**

ஆலங்குளம் - மல்லாவி

வன்னிவிளாங்குளம் - மல்லாவி

முழங்காவில் - மன்னார்

ஆண்டான்குளம் - மன்னார்

பண்டிவிரிச்சான் - மன்னார்

ஈச்சம்குளம் - வவுனியா

முள்ளியவளை - முல்லைத்தீவு

விசுவமடு - வன்னி

கிளிநொச்சி - வன்னி

மணலாறு - முல்லைத்தீவு

**மட்டக்களப்பு**

ஆலங்குளம்

தரவை

**திருமலை - மூதூர்**



## மாவீரர்களே !

உங்கள் கால்கள் தேடிய
'எல்லையை' அடையும் வரை
உங்கள் கரங்கள் ஏந்திய
துப்பாக்கி பார்த்த குறியை நோக்கி
உங்கள் இதயம் சுமந்த
'இலட்சிய தாகத்தை' சுமந்து
உங்கள் உதடுகள் சொல்லத் துடித்த
தேசிய கீதத்தை சொல்வதற்காய்,
நீங்கள் சுவாசிக்க நினைத்த
'சுதந்திரக் காற்றைத்' தேடிக்கொண்டு
உங்கள் கண்கள் கண்ட
'கனவு'களை நனவாக்க
உங்கள் காதுகள் கேட்ட
அதே, அதே...'கட்டளை'யின் கீழ்
நாங்களும் உங்களை நோக்கித்தான்!
உங்களுக்காக
நாங்கள் சமர்ப்பிக்கத் துடிப்பது
'வீரவணக்கங்களை' மட்டுமல்ல
தமிழீழத்தின்
'விடுதலை'யையும் சேர்த்துத்தான்



# இனியப் புதல்வர்காள்




வெளியீட்டுப்பிரிவு: அனைத்துலகத் தொடர்பகம் – தமிழீழ விடுதலைப் புலிகள்